## சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!






கண்ணாம்பா

சருமப் பாதுகாப்பிற்கு லக்ஸ் சோப் முறையையே தான் பின்பற்றுவதாக கண்ணாம்பா கூறுகிறார். மாசு மறுவின்றிச் சருமத்தை மிருதுவாகவும், மழமழப்பாகவும் வைத்துக்கொள்ள இந்தச் சுகந்த அழகைத் தரும் சோப்பின் நுரையில் நம்பிக்கை வைக்கக் கூடுமென்று, மற்ற இந்திய சினிமா நட்சத்திரங்களைப் போலவே இவரும் கண்டறிந்திருக்கிறார். அறிவாளியானபடியால், ஒழுங்காக லக்ஸ் சோப்பை உபயோகிக்க இவர் தவறுவதில்லை.

# லக்ஸ் டாய்லட் சோப்

LTS. 132-50-40 TM LEVER BROTHERS (INDIA) LIMITED

## திண்டுக்கல் திருமணம்



சோர்ணம்மாள் - வெங்கடாஜலபதி

சென்ற 21-6-45ல் திண்டுக்கல் மேலரத வீதியிலுள்ள என் கிருஹத்தில் என் சகோதரன் சிர. வெங்கடாஜலபதிக்கும், நாகல்நகர் ஸ்ரீ எம். கே. வி. சுப்பையர் அவர்கள் குமாரத்தி சௌ. சோர்ணம்மாளுக்கும், என் சகோதரி சௌ. சூரியகாந்திக்கும், நாகல நகர் ஸ்ரீ என்.வி.ஜி. பாலுசாமி ஐயர் அவர்கள் குமாரன் சிர. ராஜாராமுக்கும், நடைபெற்ற விவாஹ முகூர்த்தங்களின்போது பாராட்டுச் செய்திகளும் சன்மானங்களும் அனுப்பி வைத்த எண்ணிறந்த நண்பர்கள், பந்துக்கள், வியாபாரிகள் ஆகிய அனைவருக்கும் இதன் மூலம் நான் நன்றிசெலுத்துவதுடன் தனித் தனியாக பதிலளிக்க இயலாமைக்காக அன்னவர்களின் மன்னிப்பைக் கோருகிறேன்.

S. P. கிருஷ்ணய்யர், Partner.
Messrs. S. V. பால்சாமி ஐயர் & பிரதர்ஸ்
நூல் வியாபாரம் :: திண்டுக்கல்
மதுரை & சேலம்

# சுத்தம்

## ப்ரொட்யூசர்
## T.V.S. காஸ் பிளான்டின்
## முக்கிய அம்சம்




காஸ் பிளான்ட் அமைக்கப்பட்ட உங்கள் பஸ் அல்லது லாரி சுகமாக ஓட காஸ் சுத்தமாய் இருப்பது அவசியம். T. V. S. ப்ரொட்யூசர், காஸ் பிளான்ட் மற்றெல்லா தயாரிப்பையும்விட மிக சுத்தமான காஸை கொடுக்கிறது.

7000-க்கு மேற்பட்ட பிளான்டுகள் இந்தியாவில் விற்பனை ஆகி இருக்கின்றன.




T.V. சுந்தரம் அய்யங்கார்
அண் சன்ஸ், லிமிடெட்.

TVSK-15-TM மதுரை & மதராஸ்



இந்தியாவின்
பிற்காலத்திற்காகவும்
உங்களது பிற்காலத்திற்காகவும்

# உங்களது தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள்

சாமானாகவே குறைத்துச் செலவிடும் ஒவ்வொரு செயலும் பொது நன்மையை முன்னிட்டு விலைவாசிகள் குறைய உதவுகிறது. ஜனங்களுக்கு தேவையான பொருள்கள் அதிகம் கிடைக்கும்படியும் செய்கிறது. சிக்கனமாகச் செலவிடுவது தான் சாதுர்யம். அது தான் கட்டுப்பெற்றது. பழுதுபார்த்ததும், ஒட்டுப்போட்ட பழைய சாமான்களை உபயோகிப்பதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை.

நாள்தோறும் சிக்கனத்தைக் கையாண்டால் யுத்தம் முடிந்து விலைவாசிகள் குறைந்த சமயம் கையில் பணம் இருப்பது நிச்சயம். அதன் மூலம் இந்தியாவின் யுத்தகால சேமிப்புத் தொகையைப் பெருக்க உதவுகிறீர்கள். ஆகவே சமாதானம் ஏற்பட்ட உடனேயே இந்நாட்டிற்குப் பெருஞ் சாதகமான நிலைமை ஏற்படும்.



















**உங்களுக்கு இன்றியமையாதவை தவிர பிறவற்றை வாங்காதீர்கள்**

AAA 6

இந்திய சர்க்கார் இ. & ஓ. இலாகா வெளியீடு.

# கல்கி
## பொருளடக்கம்

மலர் 4 இதழ் 51 | 1945 ஜூலை 29 | பார்த்திப ஆடி 14


| | | |
|---|---|---|
| என்ன செய்தி? | ... | 7 |
| பாட்ஸ்டாம் நகரத்தில் ...... | உம்மன் | 8 |
| மறப்பது பாவம்! | ... | 10 |
| படித்துப் பார்! | ... | 14 |
| மூவர் மகாநாடு | ... | 15 |
| சிவகாமியின் சபதம் | கல்கி | 17 |
| நாமக்கல் கவிஞர் நிதி | ... | 24 |
| ஐந்தாம் நாள் | ராஜாஜி | 27 |
| பெண் பார்த்த படலம் | ஸோமாஸ் | 31 |
| மோகனச் சிரிப்பு! | பாரத்வாஜன் | 34 |
| காலக்ஷேபம் | ... | 41 |
| பாப்பா மலர் | ராஜி | 42 |
| வான சஞ்சாரம் | இசைத் தேனீ | 44 |
| இவர்களெங்கே? மன்மதனெங்கே? | டி. கே. ஸி. | 47 |
| அடுத்த வீட்டு அம்மாள் | நாடோடி | 50 |
| வட்டமேஜை | ... | 52 |




'வலது கையினால் கொடுப்பது இடது கைக்குத் தெரியக் கூடாது' என்று சொல்வதுண்டு. இது, இடது கை தர்மத்தைத் தடை செய்யப் போகிறதே என்ற பயத்தினால் அல்ல. பேருக்கும் புகழுக்கும் விளம்பரத்துக்கும் ஆசைப்படாமல் செய்யும் தர்மமே உயர்ந்த தர்மம் என்பதற்காகத்தான். இத்தகைய கொடையாளிகள், சிபியும், கர்ணனும், பாரி வள்ளலும் பிறந்த நமது நாட்டில் இன்னும் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரான மதுரை ஸ்ரீ என். எம். ஆர். வேங்கட கிருஷ்ணையர் நமது இந்த இதழின் அட்டையை அலங்கரிக்கிறார்.




வட நாட்டிலிருந்து நெடுங்காலத்துக்கு முன்பு வந்து தமிழ் நாட்டில் குடியேறித் தமிழர்களோடு ஒன்றுபட்டு விட்ட சௌராஷ்டிர சமூகத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ என். எம். ஆர். வேங்கட கிருஷ்ணையர் என்னும் பாபுவையர். ஆக்கத்திலும் தொழிலூக்கத்திலும் சிறந்து சௌராஷ்டிர சமூகத்துக்கே சிறப்பளித்து வரும் பிரமுகர்களில் ஒருவர். (பிரசித்த காந்தி பக்தரும் காங்கிரஸ் தலைவருமான ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமனின் தமையனார்.) கஸ்தூரிபா நிதிக்கு ரூபாய் பத்தாயிரமும், எட்டயபுரம் பாரதி ஞாபகார்த்த நிதிக்கு ரூபாய் ஆயிரமும் இக்குடும்பத்தார் அளித்த விஷயம் நேயர்களுக்கு நினைவிருக்கலாம். ரூ. 25,000 நன்கொடை யளித்து 'மாண்டிஸோரி' பள்ளிக்கூடம் ஒன்று நடத்தி வருகிறார்கள்.

பழைய காலத்தில் தமிழ் நாட்டிலேயே மதுரை மாநகரம் கல்வியிற் சிறந்த நகரமாயிருந்திருக்க, தற்சமயம் அங்கே முதல்தரமான கலாசாலை இல்லாமலிருப்பது மதுரைக்கே ஒரு குறையாயிருந்து வருகிறது. இந்தக் குறையைப் போக்கும் பொருட்டு மதுரைக் காலேஜைச் சிறந்த முறையில் அமைப்பதற்காகச் சில மதுரைப் பிரமுகர்கள் இப்போது பெருமுயற்சி செய்து வருகிறார்கள். இம்முயற்சியில் ஸ்ரீ என். எம். ஆர். வேங்கட கிருஷ்ணையர் முன்னணியில் நின்று வருகிறார். கலாசாலை நிதிக்கு அவர் ரூ. 15,000 நன்கொடை யளித்திருப்பதுடன், அக் கலாசாலையில் மண்டபம் ஒன்று சொந்தப் பொறுப்பில் கட்டிக் கொடுக்கவும் இசைந்திருப்பதாக அறிகிறோம். பாபுவையர் நீடூழி வாழ்ந்து இன்னும் எத்தனையோ தர்மங்களை இனிது நடத்தட்டும்!

புதிய "எச். எம். வி" ரிகார்டுகள்





பிரகாஷ் பிக்சர்ஸ்
"ராம ராஜ்ய"



மாடர்ன் தியேட்டர்ஸ்
'ராஜ ராஜேஸ்வரி'யில
**மாஸ்டர் ராஜரத்னம்**
N. 18261
தர்மம் தலை காக்கும்
ஆவின் கன்றுக்கே

"பாரதகி இக் ஸன்ஹரி"
பாட்டின் தமிழ் பதிப்பு
**மாஸ்டர் ராஜரத்னம் & விட்டல்**

N. 18262 { பாரத தேசம் வளர்
2 பாகங்கள்

மலையாளம் கதகளி பாட்டுகள்
**திருப்புனித்துறை ஸ்ரீ. விச்வநாத பாகவதர்**

N. 8857 { ப்ரிய மானஸ - "நள சரிதம்"
கண்டால் அதிமோதம் - "கிர்மீரவதம்"



நாதஸ்வர வித்வான்
திருவெண்காடு சுப்ரமண்யம் பிள்ளை

N 18926 ஜாலந்தர
சிவகுருபரனே

# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"




மலர் 4 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 51

# என்ன சேதி?

## சர்ச்சிலின் நெற்றி

ஆம்; வெற்றியல்ல,—நெற்றிதான்! அப்பேர்ப்பட்ட அஸகாய சூரனும் நாஜி ஜெர்மனியை வெற்றி கொண்ட வீரருமான சர்ச்சிலின் நெற்றி பாழும் நெற்றியாயிருக்கக் கூடாதென்று, பிரிட்டிஷ் மகாஜனங்கள் அவருடைய விசாலமான நெற்றியில் பெரிய பட்டை நாமத்தைக் குழைத்துப் போட்டதைப் பற்றித்தான் சொல்ல வந்தோம். (சைவர்களுக்கு மட்டும்: 'பட்டை நாம'த்துக்குப் பதில் 'விபூதிப் பட்டை' என்று படிக்கவும்.) யுத்தத்தில் ஜயித்த சர்ச்சிலின் செல்வாக்கை உபயோகப் படுத்திக்கொண்டு தேர்தலில் வெற்றி யடையலாமென்று எண்ணி பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ் கட்சியார் அவசர அவசரமாகத் தேர்தல் நடத்தினார்கள். அந்த அவசரமே அவர்களுக்கு விரோதமாயிற்று. தேர்தல் முடிவு கன்ஸர்வேடிவ்களுக்கு அபார தோல்வியாயும் தொழிற் கட்சிக்கு மகத்தான வெற்றியாயும் ஏற்பட்டிருக்கிறது. தேர்தலுக்கு முந்திக் காமன்ஸ் சபையில் கன்ஸர்வேடிவ்கள் 358 பேரும், தொழிற் கட்சியார் 163 பேரும் இருந்தார்கள். இப்போது கன்ஸர்வேடிவ்கள் 195 பேரும் தொழிற் கட்சியார் 390 பேருமாக மாறியிருக்கிறார்கள். பார்லிமெண்டில் மூன்றில் இரண்டு பேர் இப்போது தொழிற் கட்சியினர். இதன் பயனாகச் சர்ச்சில் மந்திரி சபை ராஜீநாமா செய்தது; அட்லி புதிய மந்திரி சபை அமைக்கிறார்.

உலகத்தின் அரசியல் சரித்திரத்தில் இது ஒரு அதிசய சம்பவம், முக்கியமான சம்பவம் என்பதில் ஐயமில்லை. இதன் காரண காரியங்களைப் பற்றியும் பலாபலன்களைப் பற்றியும் அடுத்த இதழில் விஸ்தாரமாக ஆராய்ச்சி செய்ய வேண்டும். இதற்கிடையில், இந்தியா மந்திரி பதவியை உடும்புப் பிடியாகவும் பிசாசுப் பிடியாகவும் பிடித்துக்கொண்டு "இல்லை" என்ற பல்லவியால் நம்மை யெல்லாம் பைத்தியம் பிடிக்கச் செய்து வந்த கர்னல் அமெரி ஒழிந்ததை யெண்ணிச் சந்தோஷப் படுவோம். அவருக்காகக் கங்கையிலும் காவேரியிலும் கூவம் நதியிலும் ஒரு பெரிய முழுக்குப் போடுவோமாக.

## ஆசிரியர் திலகம்

நமது பள்ளிக்கூடங்களின் உபாத்தியாயர்களுக்குக் கஷ்டங்கள் எவ்வளவோ இருக்கின்றன. எனினும் அவற்றைக் குறித்து நாம் நேற்று வரையில் அதிகமாகக் கவலைப் பட்டதில்லை. காரணம், "உபாத்தியாயர்களின் குறைகளை எடுத்துச் சொல்லிப் போராடுவதற்கும் நியாயம் கிடைக்கும்படி பார்த்துக் கொள்வதற்கும் அவர்களுக்கு ஒரு அரிய தலைவர் இருக்கிறார்; ஆகவே, நமக்கு என்ன கவலை?" என்ற எண்ணந்தான். அத்தகைய நம்பிக்கையை நமக்கு ஊட்டி வந்த ஆசிரியர் திலகமும், அறிவாளியுமான ஸ்ரீ எஸ். டி. ராமானுஜம் அய்யங்கார் சமீபத்தில் காலமாகி விட்டதை அறிந்து பெரிதும் வருந்துகிறோம்.

காலஞ்சென்ற ஸ்ரீ ராமானுஜய்யங்கார் தென் இந்திய ஆசிரியர் சங்கத்தின் காரியதரிசியாக நீண்ட காலம் இருந்து, ஆசிரியர்களின் உரிமைகளுக்காக அரும்பாடு பட்டார். நிதி வசூல் செய்து ஆசிரியர்களுக்கென்று திருச்சியில் தனி சபா மண்டபம் கட்டுவித்தார். அவர்களது குறைகளை எடுத்துச் சொல்லத் தனிப் பத்திரிகை ஒன்றும் ஆரம்பித்து வைத்தார். சலியாத உழைப்பாளி; கதர் அபிமானி. அவருடைய நன் முயற்சியினால் திருச்சியில் ஹிந்து ஸெகண்டரி ஸ்கூலானது இ. ஆர். ஹைஸ்கூலாக மாறி இன்று புகழுடன் விளங்கி வருகிறது. ஸ்ரீ அய்யங்கார் அவர்களின் உறவினர்களுக்கும், தென்னிந்திய உபாத்தியாயர்களுக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## பாடஸ்டாம் நகரத்தில்...


















-உம்மன்


ருஷ்யாவுக்குக் கடற்படை ஒன்று தயாரிக்கவும் ஏற்பாடு செய்து விட்டேன்.


யுத்தத்திற்கு முக்கியமான எல்லா கேந்திர ஸ்தானங்களையும் நானே வைத்துக் கொள்வேன்.


பிறர் ஆரம்பித்து வைத்தாலொழிய நான் ஒரு யுத்தத்திலும் கலந்து கொள்ளப் போவதில்லை.


இதற்கிடையில் நான் எதற்கும் தயாராகவே இருப்பேன்.


ஆகவே, நமஸ்காரம். மகாநாடு முடிந்து விட்டது போய் வாருங்கள்.

# மறப்பது பாவம்!

பத்து வருஷத்துக்கு முன்னால் நடந்த சம்பவம். ஒரு நாள் இரவு பதினொரு மணி. அமாவாசை இருட்டு. கிராமாந்தரத்துச் சாலை ஒன்றின் முச்சந்தி. பெரிய சாலையிலிருந்து பக்கத்திலுள்ள கிராமத்துக்குப் பிரிந்து செல்லும் சிறு பாதையைக் காட்டிக் கொண்டு கைகாட்டி மரம் ஒன்று நிற்கிறது. அதன் அடியில் ஏழெட்டு மனிதர்கள் நிற்கிறார்கள். அவர்களில் ஒருவர் கையில் லாந்தர் வைத்துக் கொண்டிருக்கிறார். புகை படைந்த அந்த லாந்தரிலிருந்து மூணுக், மூணுக் என்று வெளிச்சம் வருகிறது.

இந்த மனிதர்கள் யார்? ஏன் இந்த நள்ளிரவை நெருங்கும் நேரத்தில் சாலை ஓரத்தில் நிற்கிறார்கள்? ஒருவேளை வழிப்பறிக் கொள்ளைக்காரர்களோ? யாராவது பெரிய பணக்கார வீட்டார் கல்யாணத்துக்குப் போகிறார்களோ? அவர்களை வழிப்பறி செய்ய இவர்கள் நிற்கிறார்களோ?

ஆம்! நாம் சந்தேகப்பட்டது சரியாய்ப் போச்சே! அதோ ஒரு மோட்டார் வருகிறது. இல்லை, இரண்டு மோட்டார்கள் வருகின்றன!

சாலை ஓரத்தில் நின்றவர்கள் சட்டென்று சாலையின் மத்தியில் போய் நிற்கிறார்கள். மோட்டார் முகப்பு விளக்குகளின் வெளிச்சம் பளீரென்று விழுந்து கண்களைக் குருடாக்குகிறது. ஆயினும் இவர்கள் நகரவில்லை. கைகளை மேலே தூக்கிக் கொண்டு எல்லாரும் சேர்ந்து சத்தம் போடுகிறார்கள்!

ஆகா! இது என்ன கோஷம்?

"மகாத்மா காந்திக்கு ஜே!"

"வந்தே மாதரம்!"

"பாரதமாதாவுக்கு ஜே!"

ஓகோ! இவர்கள் தாய்நாட்டின் பெயரைச் சொல்லிக் கொண்டு பணக்காரர்களைக் கொள்ளையடிக்கும் புரட்சிக் கூட்டத்தாரா, என்ன?

இதோ, முதலிலே வந்த கார், திடீரென்று 'பிரேக்' போட்டதனால் ஏற்படும் பயங்கரமான 'வீல்' சத்தத்துடன், சாலைமத்தியில் ஜனக் கூட்டத்தின் அருகில் வந்து நிற்கிறது. பின்னால் வந்த காரும் அப்படியே நிற்கிறது.

ஜனக்கூட்டம் இரண்டு கார்களையும் சூழ்ந்து கொள்கிறது.

மறுபடியும் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்ற கோஷங்கள்.

முதல் வண்டியில் முன்னால் உட்கார்ந்திருந்தவருக்கும், சாலையில் நின்ற கூட்டத்தின் தலைவருக்கும் பின்வரும் சம்பாஷணை நடக்கிறது.

"சார், சார்! கட்டாயம் மணலூர்ப் பேட்டைக்கு வந்து விட்டுப் போக வேணும். இங்கிருந்து மூன்றே மைல் தான் இருக்கிறது."

"முடியவே முடியாது. அவரும் மனுஷர்தானே ஐயா? அவரை ஒரே நாளில் கொன்று விடுவதா?"

"அப்படிச் சொல்லக் கூடாது. ஜனங்கள் இன்று சாயங்காலத்திலிருந்து காத்துக்கொண்டிருக்கிறார்கள். மேடை, பந்தல் எல்லாம் போட்டு வைத்திருக்கிறோம்."

"உங்கள் மேடைக்கும் பந்தலுக்கும் தலைவரைப் பலி கொடுக்கவேண்டும் என்கிறீர்களா?"

"அப்படி யெல்லாம் சொல்லக் கூடாது. எல்லாரும் ரொம்ப ரொம்ப ஆவலாயிருக்கிறார்கள்......"

"ஆவலாயிருப்பவர்கள் அநித்த நடந்து வருவதற்கு என்ன? இப்போது மணி என்ன தெரிகிறதா? பன்னிரண்டு அடிக்கப் போகிறது. இன்றைக்கு மொத்தம் 21 கூட்டத்தில் பேசியிருக்கிறார்......"

"இருபத்தொன்றோடு இன்னும் ஒன்றுதானே, ஸார்! எதிலும் ஒற்றைப்படை உதவாது, ஸார்! இருபத்திரண்டாயிருக்கட்டும்."

"முடியவே முடியாது."

"ஸார்! ஸார்! மணலூர்ப்பேட்டையிலும் பக்கத்துக் கிராமத்திலும் மொத்தம் 120 வோட்டுக்கள். எல்லாம் எதிர்க்கட்சிக்குப் போய்விடும் ......"

"இதென்ன இப்படி நெஞ்சிரக்கமில்லாமல் பேசுகிறீர்களே? அவருக்கு ஜுர ரோகம், ஐயா! சரியாக உட்காரவே முடியாமல் தவிக்கிறார்!......"

"நாற்காலியில் மெத்தை போட்டு வைத்திருக்கிறோம். உட்கார முடியா

விட்டால், நின்று கொண்டே நாலு வார்த்தை பேசட்டும், ஸார்! அவர் முகத்தைக் காட்டினால் போதும்!''

"அதென்னமோ எனக்குத் தெரியாது; நீங்களே போய் அவரைக் கேட்டுக் கொள்ளுங்கள் ......''

இச் சமயத்தில் பின்னால் வந்த காரிலிருந்து, ஒரு கம்பீரமான குரல் கேட்கிறது.

"அப்பா! வெங்குசாமி! அங்கே என்ன கலாட்டா? — காரை நடுச் சாலையில் நிறுத்திக்கொண்டு!''

முன் வண்டியிலிருந்தவர் கீழே இறங்கிப் பின்னால் நின்ற காருக்குப் போகிறார்.

"பக்கத்திலே மூன்று மைலில் மணலூர்ப் பேட்டை என்ற கிராமத்துக்கு வரவேணும் என்கிறார்கள். ஜனங்கள் சாயங்காலத்திலிருந்து காத்திருக்கிறார்களாம்.''

"பின்னே, திருப்பிவிடேன் காரை! என்ன யோசனை!''

"உங்களுடைய உடம்பைப் பற்றித்தான் யோசனை. இன்றைக்கு 21 கூட்டத்தில் பேசியிருக்கிறீர்கள் ......''

"இருபத்தொன்றோடு இன்னும் ஒன்று. இரட்டைப் படையாயிருக்கட்டும்! இந்த மாதிரி சந்தர்ப்பத்துக்கு இல்லாமல் தேகம் வேறு என்னத்திற்குத்தான் இருக்கிறது? விடச் சொல்லு, காரை!''

உடனே சாலையில் காத்திருந்தவர்கள் குதூகலத்துடன் "வந்தே மாதரம்'' "மகாத்மா காந்திக்கு ஜே!'' என்று கோஷிக்கிறார்கள். இரண்டு கார்களிலும் இருபுறத்திலும் தொத்திக் கொள்கிறார்கள். கார்கள் குறுக்குப் பாதையில் போகின்றன.

இரவு சரியாக நடுஜாமத்திற்கு மணலூர்ப் பேட்டையில் பொதுக் கூட்டம் நடைபெறுகிறது. வழிமறித்து அழைத்துக் கொண்டு வரப்பட்ட தலைவர் மேடையில் நின்று பேசுகிறார்.

"என் அன்பார்ந்த தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிகளே!'' என்று ஆரம்பிக்கிறார். ஆங்கில ஆட்சிமுறையையும் அதிகார வர்க்கத்தையும் பிய்த்துப் பிய்த்து வாங்குகிறார். அன்னிய அதிகாரவர்க்கத்தின் ஒத்துக்கு மத்தளம் போடும் ஜஸ்டிஸ் கட்சியை ஆழக் குழி தோண்டிப் புதைக்கிறார்.

"ஆகையால், மகா ஜனங்களே! உங்களுடைய வோட்டுகளை தேசிய மகாசபையான காங்கிரஸ் மகாசபைக்கே கொடுங்கள். மஞ்சள் பெட்டியில் உங்கள் வோட்டைப் போடுங்கள்'' என்று முடிக்கிறார்.

இந்தத் தலைவர் யார் என்று தமிழ் நாட்டைச் சேர்ந்த எவருக்கும் நாம் சொல்ல வேண்டியதில்லை. வேறு யார்? தீரர் சத்தியமூர்த்திதான்!

* * *

ஏழு வருஷத்துக்குப் பிறகு இன்னொரு சம்பவம்.

மத்திய மாகாணத்தில் ஒரு சின்ன ரயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனில் போலீஸ் பந்தோபஸ்து தடபுடல் படுகிறது. ரயிலில் யார் வருகிறார்கள்? யாராவது கவர்னர் அல்லது கவர்னர் ஜெனரல் வருகிறாரா, என்ன?

ரயில் வந்து பிளாட்பாரத்தில் நிற்கிறது. வண்டிக்குள்ளேயிருந்து முதலில் ஆயுதபாணிகளான போலீஸ் சேவகர்கள் இறங்குகிறார்கள்.

பிறகு கைதிகள் இறங்குகிறார்கள்.

"மகாத்மா காந்திக்கு ஜே!'' என்ற கோஷம் எழுகிறது. ஆனால் ஸ்வரம், ஈனஸ்வரமாயிருக்கிறது.

வந்தவர்கள் எல்லாரும் தமிழ்நாட்டிலிருந்து — வேலூர் சிறைச்சாலையிலிருந்து—கொண்டு வரப்பட்ட தேசியக் கைதிகள். எல்லாரும் நெடுந்தூரப் பிரயாணத்தினால் களைத்துப் போனவர்கள். பலர் நோயில் அடிபட்டு மெலிந்தவர்கள்.

ஆயிரம் மேடைகளில் வீர கர்ஜனை புரிந்த தீரர் சத்தியமூர்த்தியும் அவர்களிலே ஒருவராக இருக்கிறார்.

ஆனால் ஏன் இப்படி இருக்கிறார்? அவருடைய முகத்திலே ஜொலித்த பிரகாசம் எங்கே? குரலிலே தொனித்த கம்பீரம் எங்கே? உடம்பிலே இருந்த தென்பு எங்கே? நடையிலே காணப்பட்ட பெருமித மிடுக்கு எங்கே?

"ஐயோ! இவர்தானா சத்தியமூர்த்தி?'' என்று சொல்லும்படி சிறைவாசமும் உடல் நோயும் சேர்ந்து அவரை இப்படி வாட்டி, மெலியச் செய்திருக்கின்றன!

'தேசபக்தி' என்ற பெருங் குற்றத்தைச் செய்ததற்காகச் சிறைப்படுத்தப்பட்ட அந்தக் கைதிகளை ஸ்டேஷனுக்கு வெளியே கொண்டு போகிறார்கள். இரண்டு போலீஸ் லாரிகள் அங்கே தயாராய் நிற்கின்றன.

கைதிகள் லாரிகளில் ஏற்றப்படுகிறார்கள். அவர்களுடைய பதிக்கை

முதலிய சாமான்களும் ஏற்றப் படுகின்றன.

கால்களையும் கைகளையும் தேகத்தை யுமே ஒடுக்கிக் கொண்டு லாரியில் உட் காருகிறார்கள். இரண்டு பக்கத்திலும் ஆள் நெருக்கம். எதிரே காலை நீட்ட முடியாமல் உச்சிவரை சாமான்கள். பின்னால் இரும்புக் கம்பிகள்.

லாரிகள் போக ஆரம்பிக்கின்றன. படுமோசமான சாலை. பள்ளத்திலும் மேட்டிலும் லாரி தூக்கித் தூக்கிப் போடுகிறது. எதிரே முழங்கால் முட்டி அடிபடுகிறது. பின்னால் முதுகெலும்பு அடிபடுகிறது.

சற்று நேரத்துக்கெல்லாம் மழை வருகிறது. 'சோ!' என்று பிடித்துக் கொண்டு கொட்டு கொட்டு என்று கொட்டுகிறது.

ஸ்ரீ சத்தியமூர்த்தி தம் அருகிலுள்ள சகோதரக் கைதியைப் பார்த்துச் சொல் கிறார்:—

"அப்பா! அருணாசலம்! வேலூரி லிருந்து கிளம்புகிறபோதே சொல் லேனே? வட இந்தியச் சிறைக்கு மாற் றினால் நான் திரும்பி உயிரோடு வரப் போவதில்லை என்று. அது சரியாய்ப் போச்சோ, இல்லையோ? அமராவதிக் குப் போவதற்குள்ளேயே கொன்று விடுவார்கள் போலிருக்கிறதே!"

ஆம்; கொட்டுகிற மழையில், மோச மான சாலையில், போலீஸ் லாரியில் நூறு மைல் பிரயாணம் செய்து அமரா வதி சிறைச் சாலைக்குப் போய்ச் சேரு வதற்குள்ளேயே ஸ்ரீ சத்தியமூர்த்தி பயந்தபடி ஆகிவிட்டது. அந்தப் பிரயாணத்திலே அவருடைய முது கெலும்பு முறிந்துபோய் விட்டது: சிறைக்குள்ளே போனதும் படுத்த படுக்கையானார்!

* * *

சுமார் ஒரு வருஷத்திற்குப் பிறகு இன்னொரு காட்சி.

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஸ்ரீ சத்தியமூர்த்தி படுத்திருக்கிறார்.

அவரைப் பார்ப்பதற்காக இரண்டு பழைய நண்பர்கள் வருகிறார்கள்.

ஆஸ்பத்திரி தாழ்வாரத்தில் அவர்கள் டாக்டரைச் சந்திக்கிறார்கள்.

"டாக்டர்! சத்தியமூர்த்தி எப்படி இருக்கிறார்? பிழைத்துக் கொள் வாரா?" என்று கேட்கிறார்கள்.

"பிழைப்பது ...து? மனுஷருக்கு எப்படியோ 'ஸ்பைனல் காலம்'

(முதுகெலும்பு) முறிந்து போயிருக் கிறது. உயிரோடிருந்த வரையில் லாபம்! ஆனால் இதைப்போய் அவரிடம் சொல்லாதீர்கள்!" என்கிறார் டாக்டர்.

நண்பர்கள் முகத்தில் புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு ஸ்ரீ சத்திய மூர்த்தி படுத்திருந்த அறைக்குள் பிரவேசிக்கிறார்கள்.

"வாருங்கள்!" என்று மெலிந்த குரலில் வரவேற்பு.

"உங்களுக்கு உடம்பு சுமாராயிருக் கிறதே! என்னமோ என்று பயந்து கொண்டல்லவா வந்தோம்?" என் கிறார் ஒரு நண்பர்.

"ஆமாம்; முகத்திலே நல்ல களை இருக்கிறது. சீக்கிரம் சொஸ்தமாகி விடும்" என்கிறார் இன்னொரு நண்பர்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் முகம் உண் மையாகவே மலர்கிறது. சொல்கிறார்:—

"ஏதோ உங்கள் எல்லாருடைய வாக்கும் பலித்தால் சரிதான். எனக்கு இரண்டே இரண்டு ஆசை. இந்த நாட்டுக்குச் சுயராஜ்யம் வந்து பார்க்க வேண்டும். லக்ஷ்மிக்குக் கல்யாணம் செய்து பார்க்க வேண்டும். இந்த இரண்டு ஆசையும் நிறைவேறி விட்டால் போதும்! அப்புறம் உயிரைப் பற்றிக் கவலை இல்லை."

இது நடந்து இரண்டு நாளைக்கெல் லாம் ஸ்ரீ சத்தியமூர்த்தி கண்ணை மூடினார். தாய் நாட்டின் தொண்டில் உயிர்த் தியாகம் செய்த வீர புரு ஷர்கள் எந்தப் புண்ணிய உலகத் துக்குப் போவார்களோ, அந்த உலகத் துக்கு அவரும் போய்ச் சேர்ந்தார்.

* * *

இருபத்தைந்து வருஷ காலம் அல் லும் பகலும் அனவரதமும் தேசத் தொண்டு செய்து இறுதியில் உயிரை யும் தாய்நாட்டுக்காகத் தியாகம் செய்த தீரர் சத்தியமூர்த்தியைத் தமிழ்நாடு என்றென்றைக்கும் மறக்கக் கூடாது; மறப்பது மகா பாவம்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்த முயற்சி ஒன்று சென்ற வருஷத்தில் ஆரம்பமாயிற்று.

சிற்சில காரணங்களினால் அந்த முயற்சி தீவிரமாக நடைபெறாமல் தடைப்பட்டு நின்றது.

அந்தக் காரணங்களில் முக்கிய மானவை இரண்டு:—

1. சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தம் எந்தவிதமாக உருக்கொள்ளும் என்று தெரியாமலிருந்தது.

2. ஞாபகார்த்த முயற்சிக்குப் பொறுப் பேற்று நடத்துகிற மனிதர்கள் யார் என்பது சரியாக அறிவிக்கப்படாதது.

இந்த முக்கிய காரணங்களினாலும் வேறு சில காரணங்களினாலும் தீரர் சத்தியமூர்த்தியிடம் தமிழ் மக்கள் கொண்டுள்ள அன்புக்கும் மரியாதைக்கும் ஏற்றவாறு ஞாபகார்த்த நிதி வசூல் நடைபெறவில்லை.

இந்த நிலைமையில், ஸிம்லா மலை உச்சியிலிருந்து ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகச் சின்னம் சம்பந்தமாக ஓர் அருமையான யோசனை சென்ற வாரத்தில் வெளியாகியிருக்கிறது.

ஸிம்லா மகாநாடு தோல்வியடைந்து விட்டதாக வைஸ்ராய் வேவலே புலம்பி விட்ட போதிலும், அந்த மகாநாடு கூடியதின் காரணமாகத் தமிழ் நாடு ஒரு பெரும் பயன் அடைந்ததென்றே சொல்லவேண்டும்.

ஸிம்லாவில் கூடிய அரசியல் மகாநாட்டை உத்தேசித்து ராஜாஜி அங்கே போயிருந்தார். போன இடத்தில் மகாநாட்டின் மர்மமான நடவடிக்கைகளில் ஒருபுறம் அவர் ஈடுபட்டிருக்கையில், மற்றொருபுறம் தமிழ்நாட்டின் முன்னேற்றத்தையும் தமிழ் மக்களின் நன்மையையும் பற்றி அவர் உள்ளம் சிந்தித்துக் கொண்டேயிருந்தது.

ஸிம்லாவிலே இந்திய அராசங்க இயந்திரத்தில் உத்தியோகம் பார்க்கும் தென்னிந்தியர்கள் ராஜாஜிக்கு மேற்படி ஞாபகங்களைத் தூண்டி விட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஸிம்லாவிலுள்ள தென்னிந்தியர் சங்கத்தில் ராஜாஜி தமிழில் பேசினார்; தமிழ் நாட்டைக் குறித்துப் பேசினார்.

இவற்றின் பலனாக ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தத்தைக் குறித்து ஸிம்லாவிலிருந்து ஓர் அறிக்கை வெளியாயிற்று.

இந்த ஸிம்லா அறிக்கையில் ராஜாஜி கையொப்பம் இட்டிருக்கிறார். இன்னும் இந்திய அரசாங்கத்தில் பெரிய பெரிய உத்தியோகங்களை வகிக்கும் தென்னிந்தியப் பிரமுகர்கள் பலர் அதில் கையொப்ப மிட்டிருக்கிறார்கள்.

அறிக்கையில் கண்டிருக்கும் யோசனை என்ன வென்றால், சென்னையில் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களின் ஞாபகார்த்தமாக ஒரு என்ஜினியரிங் காலேஜ் ஸ்தாபிக்க வேண்டு மென்பதுதான்.

இப்படி ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தமாக ஏற்படும் என்ஜினியரிங் காலேஜில் சாதிமத வேற்றுமைக் காரணங்களுக்காக யாரையும் ஒதுக்காமல், தகுதி ஒன்றையே பிரதானமாகக் கருதி மாணாக்கர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் யோசனை கூறியிருக்கிறார்கள்.

இதைத் தினசரிப் பத்திரிகையில் படித்ததும் தமிழ் நாட்டின் ஒரு மூலையிலிருந்து இன்னொரு மூலை வரையில் கம்பீரமாக எழுந்த ''சபாஷ்!'' என்ற கோஷத்தில் நாமும் தீவிரமாகக் கலந்து கொண்டோம்.

இன்னமும் நாலாபுறமும் ''சபாஷ்!'' ''சரியான யோசனை!'' ''பேஷான காரியம்'' என்ற கோஷங்கள் எழுந்து நம் செவிகளை நிரப்புகின்றன.

ஏன்? பம்பாயிலும், பூனாவிலும், கல்கத்தாவிலும், நாகபுரியிலும், லாகூரிலும், ஜெம்ஷெட்பூரிலும், புதுடில்லியிலும், அலகாபாத்திலும், இலங்கையிலும், தென்னாப்பிரிக்காவிலும் உள்ள தமிழர்கள் ஒரே குரலாக மேற்படி யோசனைக்குச் ''சபாஷ்!'' போட்டுக் கொண்டிருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

* * *

தற்சமயம் தமிழ் நாட்டில் எத்தனையோ இளைஞர்கள் கல்வி கற்க வசதியின்றி, காலேஜுகளில் இடமின்றி, தவித்துத் தத்தளிப்பது பற்றிப் பத்திரிகையில் சென்ற இரண்டு மூன்று மாதமாகப் பத்தி பத்தியாகப் படித்துக் கொண்டிருக்கிறோம்.

வெறும் பி. ஏ. படிப்புக்கே இவ்வளவு கஷ்டமென்றால், என்ஜினியரிங் முதலிய பயிற்சிப் படிப்புக்கு எவ்வளவு கஷ்டம் என்று சொல்ல வேண்டியதில்லை.

உண்மையில் தற்சமயம் நமது நாட்டுக்கு மிகவும் அவசியமான கல்வி, இயந்திரத் தொழில்களுக்கு ஜீவாதாரமான என்ஜினியரிங் கல்விதான்.

சமீபகாலத்தில் ஆச்சரியமான முன்னேற்றம் அடைந்திருக்கும் ருஷியா போன்ற தேசங்களில் எல்லாக் காலேஜுகளையுமே என்ஜினியரிங் காலேஜுகளாக அமைத்திருக்கிறார்கள்.

ஆகவே, தேச முன்னேற்றத்துக்காக அல்லும் பகலும் பாடுபட்ட தீரரின் ஞாபகார்த்தமாக, தேச முன்னேற்றத்துக்கு மிக அவசியமான என்ஜினியரிங் காலேஜ் ஏற்படுத்துவது பெரிதும் பொருத்தமானது.

ஸ்ரீ சத்தியமூர்த்தி நமது வாழ்நாளெல்லாம் வகுப்புவாதம் என்னும் பிசாசோடு போரிட்டவர். பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தின்மீது அவருக்கு எவ்வளவு கோபமோ அவ்வளவு வகுப்புவாதத்தின் மீதும் உண்டு.

இப்போதுள்ள என்ஜினியரிங் காலேஜ்களின் சாதிவாரியாகவும், ஜில்லாவாரியாகவும் மாணுக்கர்களைச் சேர்த்துக்கொள்ளும் முறை கையாளப்படுகிறது. இதற்கு ஏதேனும் நியாயம் இருக்கலாம்; அல்லது நியாயம் இல்லாமலும் இருக்கலாம்!

ஆனல் வகுப்புவாதத்துக்கு இடங்கொடுக்காமல் தகுதியை முன்னிட்டே இடங்கொடுக்கும் என்ஜினியரிங் காலேஜ் ஒன்று சென்னை மாகாணத்துக்குத் தேவை என்பதை யாரும் மறுக்க முடியாது.

அப்படிப்பட்ட வகுப்பு வாதமற்ற என்ஜினியரிங் காலேஜ் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தமாக அமைவது எல்லாவிதத்திலும் பொருத்தம் என்று சொல்ல வேண்டியதில்லை.

ஸிம்லாவிலிருந்து புறப்பட்ட மேற்படி சிறந்த யோசனை கூடிய சீக்கிரத்தில் உருவான திட்டமாக வெளியாகுமென்றும், பொறுப்பான மனிதர்கள் அதற்காக நிதி வசூல் தொடங்குவார்கள் என்றும் எதிர்பார்க்கிறோம்.

அதைப் பரிபூரணமாகவும் உற்சாகமாகவும் ஆதரிப்பது தமிழ்நாட்டாரின் முக்கிய கடமை. இலங்கையிலிருந்து பேஷாவர் வரையில் குடியேறியுள்ள தென்னிந்தியர்களின் கடமை.

தமிழர்கள் எல்லாரும் அவரவர்களுடைய அடுத்த மாதத்து வரவு செலவுத் திட்டத்தில் இதற்கும் ஏற்பாடு செய்து கொள்ளவேண்டும்.

தீரர் சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தமாகவும், தமிழ்நாட்டின் முன்னேற்றத்துக்காகவும், வரப்போகும் தமிழ் சந்ததிகளின் நன்மைக்காகவும் மேற்படி நிதிக்குத் தாராளமாக உதவ வேண்டும்.

இது நமது கடமை மட்டுமல்ல; பெருமையுடன் நாம் கோர வேண்டிய உரிமை; பெரும் பாக்கியமாகக் கருதிச் செய்ய வேண்டிய திருப்பணி.

# படித்துப் பார்!

## காய்கறித் தோட்டம்

[ஆசிரியர்: ஸ்ரீ மு. அருணாசலம்; பிரசுரம்: சக்தி காரியாலயம், சென்னை; விலை: ரூ. 5.]

காசி ஹிந்து விசுவ வித்தியாலயத்தில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கும் இப்புத்தகத்தின் ஆசிரியர் ஸ்ரீ மு. அருணாசலம் சில மாதங்களுக்கு முன்னர்தான் அவ்வேலையை ஒப்புக்கொண்டார். சென்னையை விட்டுக் காசிக்குப் போவதாக அவர் தீர்மானித்ததும் அவருடைய நண்பர்கள் சிலர் அவரை மிகவும் பயமுறுத்தினார்கள். "ஐயா! காசிக்குப் போகிறேன் என்கிறீரே! அங்கே கறிகாய்கள் ஏகக் கிராக்கியாமே! வாழைக்காய் ஒன்று ஒரு ரூபாயாமே! கத்தரிக்காய் ஒன்று இரண்டு ரூபாயாமே!" என்றெல்லாம் அச்சுறுத்தினார்கள். இருந்தும், அவர் பயப்படாமல் துணிந்து காசிக்குப் புறப்பட்டுச் சென்றதே அதில் ஏதோ இரகசியம் இருக்க வேண்டும் என்று தோன்றிற்று.

அந்த இரகசியம் இப்போது வெட்ட வெளிச்சமாகி விட்டது. ஸ்ரீ அருணாசலம் காய்கறிகளின் விலையைப் பற்றித் துளிக்கூடக் கவலைப்படாமல் அந்நகருக்குத் துணிச்சலாகக் காசி சென்றதன் காரணம் இப்போது புலப்பட்டு விட்டது. தமக்கு வேண்டிய காய்கறிகளைச் சொந்தமாகவே பயிரிட்டுக்கொள்ள அவருக்குத் தெரியுமாம். சிறு வயது முதலாக அவர் சொந்தமாகப் பூந்தோட்டம், பழத்தோட்டம், காய்கறித் தோட்டம் எல்லாம் போட்டுப் பார்த்தாராம். நிலத்தைக் கொத்துவது, குழி தோண்டுவது, தண்ணீர் இறைப்பது போன்ற எல்லா வேலைகளையும் அவரே செய்து வந்தாராம்.

அந்தப் பழைய அனுபவத்தை வைத்துக்கொண்டுதான் அவர் இந்தப் புத்தகம் எழுதியிருக்கிறார். தோட்டம் அமைத்ததிலிருந்து, பல வித காய்கறிகளைப் பயிரிடவேண்டிய வழி, காலம் முதலிய சகல விவரங்களையும் 'படிக்கும் தமிழர், விஷயத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு, தெரிந்த விஷயத்தைப் பேசும் பாஷையில் எழுதி' யிருக்கிறார்.

இந்த நூலின் அட்டையிலுள்ள காய்கறிகளின் வர்ணப் படத்தைப் பார்க்கும்போதே நாவில் ஜலம் சொட்டுகிறது. புத்தகத்தினுள்ளேயும் பல படங்கள் இருக்கின்றன.

காய்கறிகள் ஏக கிராக்கியாக விற்கும் இந்நாளில் இப்புத்தகத்துக்கு ஏக கிராக்கி இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

## இசைச் செல்வன்

[ஆசிரியர்: ஹென்ரிக் ஸின்கிவிஸ்; தமிழாக்கியவர்: ஸ்ரீ ப. திருமலை; பிரசுரம்: ஜோதி நிலையம், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: அணு 0—8—0.]

ஸ்ரீ ப. திருமலை "தனிமையை விரும்பும் ஸ்காண்டிநேவியன் மன உணர்ச்சியையும் இசைச் செல்வனான ஜங்கோவின் பூர்த்தியாகாத அபிலாஷையையும் வாசகர்களே படித்து ரசிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொள்வதுடன் தமது முன்னுரையை முடித்திருக்கிறார். நாமும் அவ்வாறே வேண்டிக் கொள்கிறோம்!

# மூவர் மகாநாடு

**[நமது அந்தரங்க நிருபர் சர்ச்சிலையும் ஸ்டாலினையும் பேட்டி கண்டு அனுப்பிய பாதாளத் தந்தி]**

சரணாகதியடைந்த ஜெர்மனியில், 'பாட்ஸ்டாம்' நகரில் மூப்பெரியார்கள் கூடுகிறார்கள் என்று தெரிந்ததும் தலையைக் கூடச் சரியாக வாரிக் கொள்ளாமல் சமுத்ர மார்க்கமாய் அமெரிக்கா போய்ச் சேர்ந்தேன். "பாட்ஸ்டாம் நகரில் மகாநாடு நடக்கும் போது அமெரிக்காவுக்குப் போவானேன்?" என்று கேட்கலாம்.

மகாநாடு நடக்கும்போது பாட்ஸ்டாம் நகருக்குள் பொது ஜனங்களையோ பத்திரிகைப் பிரதிநிதிகளையோ உள்ளே நுழைய முடியாமல் பலமான பந்தோபஸ்து செய்திருந்ததால் அமெரிக்காவை அடைந்தேன்.

அமெரிக்காவிலிருந்து பிரஸிடென்ட் ட்ரூமன் ஒரு தனிக் கப்பலில் ஒரு பெரிய பரிவாரத்துடன் மகாநாட்டுக்கு விஜயம் செய்வார் என்று தெரிந்ததும் நானும் அமெரிக்க அரசாங்கத்தின் ஒரு முக்கிய உத்யோகஸ்தனைப்போல் உடை உடுத்திக் கொண்டு "கும்பலில் கோவிந்தா"வாக ஐக்யமாகி விட்டேன்.

பாட்ஸ்டாமிற்குள் நகரப் பிரவேசம் செய்தபோது நகரின் எல்லைப்புறக் காவலாளிகள் என்னை உற்று உற்றுப் பார்த்தார்கள். பதிலுக்கு நானும் உற்றுப் பார்க்கவே பேசாமல் இருந்து விட்டார்கள். 'தப்பியது தம்பிரான் புண்ணியம்' என்று போய்ச் சேர்ந்தேன். மகாநாட்டுப் பந்தலுக்குள் (தவறு; மன்னிக்கவும்! மகாநாடு என்றதும் நம்மூர் சம்பிரதாயப்படி பந்தல் ஞாபகம்தான் வருகிறது) — மகாநாட்டுக் கட்டிடத்துக்குள் நுழைந்து ட்ரூமன் பரிவாரங்களோடு அன்ன பான ஆகாராதிகளை முடித்துக் கொண்டு விச்ராந்தியாக ஒரு பார்க்கு பெஞ்சியின் மீது போய் உட்கார்ந்து, சர்ச்சில், ஸ்டாலின் வருகைக்காகக் காத்திருந்தேன்.

மாம்பலம், கும்பகோணம் கொசுக்களின் மூதாதையர்கள் பாட்ஸ்டாமிலும் என்னைச் சித்திரவதை செய்தார்கள். கொசு வேட்டையில் தீவிரமாக ஈடுபட்டிருந்த சமயம் திடீரென்று ஏககாலத்தில் எல்லாக் கொசுக்களும் 'ஜிவ்' வென்று பறந்து ஓட ஆரம்பித்தன. திரும்பிப் பார்த்தால் எனக்கு முன்னால் ஒரு புகை மண்டலம் தெரிந்தது. புகைக்கு அஞ்சியே கொசுக்கள் பறந்து ஓடி இருக்க வேண்டும். புகைக்குப் பின்னால் சர்ச்சில் துரை காணப்பட்டார்.

சர்ச்சில் சமீபத்தில் வந்ததும் நான் எழுந்து நின்று இரண்டு விரலை 'வி' மாதிரி காண்பித்தேன். அவர் என்னை அருகில் அழைத்துப் புன்னகை பூத்த முகத்துடன் "யாருக்கு வெற்றி?" என்று கேட்டார்.

"எனக்குத்தான்" என்றேன்.

"எப்படி?" என்று கேட்டார்.

"ஸிம்லா மகாநாடு தோல்வியுற்ற விஷயம் தங்களுக்குத் தெரியுமல்லவா?"

"ஆமாம்."

"அது எனக்கு வெற்றி!"

"எப்படி?"

"அந்த மகாநாடு முறிந்து விடும் என்று எனக்கு அப்பவே தெரியும். நான் சொன்னால் யார் கேட்பார்கள் என்று சும்மா இருந்து விட்டேன். நான் நினைத்தபடி இப்போது நடந்து விட்டது. ஆகையால் இது எனக்கு வெற்றிதானே?"

"மகாநாடு முறிந்து விடும் என்று உனக்கு எப்படித் தெரியும்?"

"ஜனாப் ஜின்னாவின்மீது எனக்கு அளவற்ற நம்பிக்கை. அவர் எப்படியும் முட்டுக்கட்டை போடுவார். மகாநாடு கண்டிப்பாய் முறிந்து போகும் என்று எனக்கு சர்வ நிச்சயமாகத் தெரியும்."

"அது சரி; அப்படியானால் அதற்கு என்னிடத்தில் விரலைத் தூக்கி 'வி' குறி காட்டுவானேன்? மகாநாடு முறிந்து போனதில் எனக்கு ரொம்ப வருத்தமல்லவா?"

"அதற்காக நான் 'வி' காட்டவில்லை! இரண்டு விரல்களைக் காட்டியது பிரிட்டிஷ் பொதுத் தேர்தல் சம்பந்தமாகத்தான்."

"பொதுத் தேர்தலில் எனக்குத்தான் வெற்றி என்கிறாயா?"

"ஊஹூம்; அதுவும் இல்லை."

"பின் என்னதான் சொல்லுகிறாய்?"

"வெற்றி தோல்வி இந்த இரண்டில் ஒன்று உங்களுக்கு நிச்சயம் உண்டு என்பதைச் சொல்லவே இரண்டு விரல்களைக் காட்டினேன்" என்று கூறினேன்.

சர்ச்சில் அருகில் ஆட்லி துரையும் நின்றுகொண்டிருந்ததால் யாருக்கு வெற்றி என்பதைப் பகிரங்கமாய்ச் சொல்ல முடியாமலேயே அவ்வாறு இரண்டு விரல்களையும் காட்டி வைத்தேன்.

சர்ச்சில் துரை என்னைப் பார்த்து "நீ யமகாதகன்" என்றார்.

"தங்களை விடவா?" என்று கேட்டுவிட்டு மறுபடியும் விரலை அப்படியே வைத்துக் கொண்டேன்.

சர்ச்சில் முகத்தில் பலவித சந்தேகக் குறிகள் காணப்பட்டன. என்னுடைய 'வி' குறி சமிக்ஞைக்கு இன்னதுதான் அர்த்தம் என்று விளங்காமல் முகத்தைச் சுளித்தவாறு எரிச்சலுடன் "ஏன் இன்னும் விரலை நீட்டிக்கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டார்.

"தங்களுக்கு இரண்டு சுருட்டுகள் வைத்திருக்கிறேன். அதைச் சங்கேதமாகச் சொல்லவே இரண்டு விரலைக் காண்பித்தேன்."

"எதற்காகச் சுருட்டு? இந்த ஊரில் சுருட்டு கிடைக்காதா?"

"கிடைக்கிறது. ஆனால் யானை விலை குதிரை விலை சொல்கிறார்கள். அதுவும் 'பிளாக் மார்க்கெட்'டில்தான் கிடைக்கிறது. அதற்காகத்தான் இரண்டு சுருட்டுகளைக் கையோடு கொண்டு வந்தேன்" என்றேன்.

"நீ ஒரு பலே பேர்வழி" என்றார் சர்ச்சில்.

"தங்களை விடவா?" என்று கூறிவிட்டு, "ஆமாம், சர்ச்சில்! ஸார் இந்தத் தேர்தலில் டோரிக் கட்சி தோல்வியுற்றால் அப்புறம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் என்ன ஆகிறது!" என்று கேட்டேன்.

சர்ச்சில் ஒரு நீண்ட புகைப் பெருமூச்சு விட்டுவிட்டு "ஹூம், அது ஒரு பெரிய ஸ்டோரி' இப்போது அவகாசமில்லை. நான் மகாநாட்டுக்குப் போகவேண்டும்" என்று வேகமாகக் கிளம்பினார்.

"மகாநாடு முடிந்து ஊருக்குப் போகும் போது என்னையும் கூட அழைத்துப் போகிறீர்களா?" என்று கேட்டேன்.

சர்ச்சில் பலமாகத் தலையை அசைத்தார்.

அது "மாட்டேன்" என்று சொல்கிறாரா, அல்லது "ஆகட்டும்" என்று சொல்கிறார் என்று தெரியாமல் அவர் என்னுடைய 'வி' குறிக்கு அர்த்தம் புரியாமல் விழித்ததைப் போல் நானும் விழித்தேன்.

மகாநாடு பாதிக்குமேல் நடந்து முடிந்தும் பெரியார்கள் சாப்பிட்ட விவரம் தவிர முக்கியமாக வேறு ஒரு விவரமும் தெரியவில்லை. எனவே நான் ஸ்டாலினை அணுகினேன். "நான் அந்தரங்க சிருபர் ஆகையால் மகாநாட்டில் அந்தரங்கமாக நடந்த விவகாரங்களை எனக்கு அந்தரங்கமாகச் சொல்ல வேணும்" என்றேன்.

ஸ்டாலினுடைய கண்கள் சந்தேகத்துடன் என்னை உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரை நோக்கின. என் தலை தொப்பியைக் கண்டு அவருடைய சந்தேகம் வலுத்திருக்க வேண்டும்.

"நீ யார்?" என்றார்.

"நான் நான்தான்!" என்றேன்.

"என்ன? நீ ஹிட்லர் அல்லவே?"

"கண்டிப்பாய் இல்லை" என்று கடவுள் மீது பிரமாணம் வைத்தேன். அப்புறந்தான் அவருக்கு நம்பிக்கை பிறந்தது. கடவுள்மீது இல்லை. என்மீதுதான்!

என்னுடைய தொப்புத் தலை கலைந்து முன் நெற்றியில் விழுந்தால் ஹிட்லரைப் போல் இருக்குமாகையால் ஸ்டாலின் சந்தேகப்பட்டதில் ஆச்சரியமில்லை.

"பின்னர், என்னிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டு மகாநாட்டு விவரங்களை எனக்கு அந்தரங்கமாகச் சொல்லி முடித்தார்.

"எனக்கு ஜெர்மன் தேசம் கஷ்ட நஷ்ட யுத்தச் செலவு பங்கீட்டில் 56% கொடுக்க வேண்டும். அமெரிக்காவுக்கு 22%ம் பிரிட்டனுக்கு 22%ம் பங்கு" என்றார்.

"ரொம்பக் குறைச்சல்! ரொம்பக் குறைச்சல்!!" என்று கத்தினேன்.

"குறைச்சல் என்ன? 22%க்கு மேல் கொடுக்க முடியாது. அதுவே அதிகம்" என்றார் ஸ்டாலின் கோபமாக.

"அவர்களுக்குச் சொல்லவில்லை. தங்களுக்கு 56% குறைச்சல் என்றுதான் சொன்னேன்" என்று கூறிச் சமாளித்துக் கொண்டேன்.

இதற்குள் சர்ச்சில் துரை வந்து "என்ன ஊருக்கு வருகிறாயா. தேர்தல் 'ரிஸல்ட்' தெரிந்து கொண்டு திரும்பி வந்து விடலாம்" என்று என்னைப் பார்த்து அவசரப்படுத்தவே, அவருடனேயே கப்பல் ஏறி லண்டனுக்கு விரைந்து சென்றேன்.

# சிவகாமியின் சபதம்



கல்கி

## அத்தியாயம் 37

## புலிகேசியும் சிவகாமியும்

சத்ருக்னர் கூறி வந்த வரலாற்றில் மேற்கண்ட இடத்துக்கு வந்ததும் மாமல்லருக்கு மூச்சு நின்று விடும்போலிருந்தது. மேலே நடந்ததைத் தெரிந்து கொள்ள அவர் அவ்வளவு ஆவலாயிருந்தார். ஒரு கண நேரத்திற்குள் அவருடைய மனம் என்னவெல்லாமோ கற்பனை செய்தது. சத்ருக்னனும், சிவகாமியும் புறப்பட்டு ஓடி வந்திருக்க வேண்டும், மறுபடியும் வழியில் அவனுக்கு ஏதோ ஆபத்து ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைத்தார். அவனை அந்த ஆபத்திலிருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கு அவருடைய உள்ளம் துடிதுடித்தது.

"சத்ருக்னா! ஏன் இப்படிக் கதையை வளர்த்திக் கொண்டிருக்கிறாய்? சிவகாமியை எங்கே விட்டுவிட்டு வந்தாய்? என்ன நிலைமையில் விட்டு விட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்லு!" என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

"பிரபு, சிவகாமி தேவி இப்போது வட பெண்ணை நதிக்கு அப்பால் போய்க்கொண்டிருப்பார்! பொன் முகலி ஆற்றுக்கும் வட பெண்ணைக்கும் மத்தியில் தேவியை நான் விட்டு விட்டு வந்தேன். அந்த ராட்சதன் புலிகேசியிடம் தான் விட்டுவிட்டு வந்தேன் பாவி!" என்று சத்ருக்னன் துயரக் குரலில் கூறினான்.

மாமல்லரின் கண்களில் தழற்பொறி பறந்தது. புலிகேசியிடம் வந்த கோபத்தைக் காட்டிலும் சத்ருக்னனிடம் அதிகக் கோபம் அவருக்கு வந்ததாகத் தோன்றியது.

"இதென்ன? சிவகாமியைப் புலிகேசியிடம் விட்டுவிட்டு நீ மட்டும் தப்பித்து வந்தாயா? அல்லது வரும் வழியில் ஒருவேளை மறுபடியும் சிறை பிடித்து விட்டார்களா? சத்ருக்னா! என்னிடம் விளையாட வேண்டாம். சீக்கிரம் விஷயத்தைச் சொல்!" என்று கர்ஜனை புரிந்தார்.

அப்போது ஆயனர், மாமல்லருக்குக் காரணம் விளங்காத உற்சாகக் குரலில், "பிரபு! சத்ருக்னன் சொல்கிறபடி முறையாகச் சொல்லட்டும். தயவு செய்து சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள்!" என்றார்.

சத்ருக்னன் மறுபடியும் சொல்லத் தொடங்கினான்:—

"பிரபு! சிவகாமி தேவி உடனே என் யோசனையைச் சந்தோஷமாய் ஒப்புக் கொண்டு தப்பிச் செல்ல இணங்குவார் என்று எதிர்பார்த்தேன். இதில் பெரும் ஏமாற்றம் அடைந்தேன். அதுவரையில் தைரியமாயிருந்த சிவகாமி தேவி என்னுடைய யோசனையைக் கேட்டதும் திடீரென்று விம்மி அழத் தொடங்கினார். முகத்தைக் கைகளால் பொத்திக் கொண்டு தேம்பினார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவரைச் சமாதானப்படுத்த முயன்றேன். அப்போது சிவகாமி அம்மை என்னை வெறித்துப் பார்த்து, 'அவருடைய வாக்குறுதியை நம்பி இந்தக் கதி அடைந்தேன்' என்றார். உடனே, 'இல்லை, இல்லை. அவர் பேச்சைக் கேளாததால் இந்த விபரீதம் வந்தது.

இனி அவருடைய முகத்தில் எவ்விதம் விழிப்பேன்?' என்றார். இன்னும் என்ன வெல்லாமோ அர்த்தமில்லாத சம்பந்தமற்ற வார்த்தைகளைச் சொன்னார். இதனாலெல்லாம் என் திகைப்பு அதிகமாயிற்று. ஒரு வேளை அவருக்குச் சித்தப் பிரமை ஏற்பட்டு விட்டதோ என்று மிகவும் பயந்து போனேன். பிறகு, சிவகாமி அம்மை சளுக்கர் படைகள் நமது கிராமங்களில் செய்த அட்டூழியங்களைத் தம் கண்களால் பார்த்தது பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். அப்புறந்தான் அவருடைய அறிவுத் தெளிவைப் பற்றி எனக்கு ஏற்பட்ட சந்தேகம் நீங்கிற்று. அவர் சொன்னவற்றை யெல்லாம் சிறிது நேரம் நான் பொறுமையாய்க் கேட்டேன். பிறகு 'அம்மா! மகேந்திர பல்லவரும் மாமல்லரும் இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்குவார்கள்!' என்றேன். அப்போது சிவகாமி தேவிக்கு ஏற்பட்ட ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் பார்க்க வேண்டுமே? 'ஆம், சத்ருக்னா, ஆம்! இந்தப் பாதகச் சளுக்கர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டும். அந்தக் காட்சியை என் கண்ணால் பார்க்க வேண்டும்!' என்றார். அவர் அப்போது போட்ட கூச்சலில் தூங்குகிறவர்கள் எழுந்திராமல் இருக்க வேண்டுமே, காவலர்கள் சந்தேகங் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குப் பயமாய்ப் போய் விட்டது. நல்ல வேளையாக அங்கே ஸ்திரீகள் பலர் தூக்கத்திலேயே புலம்புவதும் அழுவதும் பிதற்றுவதும் சகஜமாயிருந்தபடியால், சிவகாமி தேவியின் கூச்சல் காவலர்களின் கவனத்தைக் கவரவில்லை.

பிறகு அவரை நான் மெள்ள மெள்ளச் சாந்தப் படுத்தினேன். மறுபடியும் தப்பிச் செல்லும் யோசனையைக் கூறினேன். அப்போது அவர் என்னை வெறித்துப் பார்த்து, 'ஐயா, நிஜமாகவேதான் என்னைத் தப்பி வரச் சொல்கிறீரா? இங்கே என்னைப்போல் ஆயிரம் பெண்கள் இருக்கிறார்கள். இவர்களில் சிலர் கட்டிய புருஷனை விட்டுவிட்டு வந்திருக்கிறார்கள். சிலர் கைக் குழந்தைகளைக் கதற விட்டு விட்டு வந்திருக்கிறார்கள். இவர்களை எல்லாம் இந்தச் சளுக்க ராட்சதர்கள் கொண்டு போக விட்டுவிட்டு நான் மட்டும் தப்பிச் செல்ல வேண்டுமா? எனக்குத் தாலி கட்டிய கணவன் இல்லை; வயிற்றில் பிறந்த குழந்தையும் இல்லை. நான் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? என்னை விட்டு விடுங்கள்; இங்குள்ள கைக் குழந்தைக்காரிகளில் யாரையாவது ஒருத்தியை அழைத்துப் போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டாகும்' என்றார். என் மனமும் இளகிவிட்டது. ஆயினும் மனதைக் கெட்டிப் படுத்திக் கொண்டு, 'அம்மா! மகேந்திர சக்கரவர்த்தி எனக்கு இட்ட கட்டளை தங்களைப் பத்திரமாய் அழைத்து வர வேண்டும் என்பதுதான். நான் சக்கரவர்த்தியின் ஊழியன். அவருடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டியவன்' என்றேன்.

இதனால் அவருடைய மனம் மாறாது என்று எனக்குத் தெரிந்தேயிருந்தது. ஆதலின், மறுபடியும் 'அம்மா! உங்களுக்குப் புருஷனில்லை, குழந்தை இல்லை என்பது உண்மைதான். ஆனால் தந்தை ஒருவர் இருக்கிறார் அல்லவா? ஏக புத்திரியாகிய தங்களைப் பிரிந்து அவருடைய மனம் என்ன பாடுபடும்? அதை யோசிக்க வேண்டாமா?' என்றேன். சிவகாமி தேவியின் கண்களில் அப்போது கண்ணீர் துளிப்பதைக் கண்டேன். அவர் தழுதழுத்த குரலில் 'ஆம்; என் தந்தைக்குப் பெரிய துரோகம் செய்து விட்டேன். ஐயோ! அவர் பிழைத்தாரோ, இல்லையோ?' என்றார். 'அம்மா! அவரைப் பிழைப்பிக்க விரும்பினால் நீங்கள் உடனே என்னுடன் கிளம்ப வேண்டும்!' என்றேன் நான். சிவகாமி தேவி மறுபடியும் முகத்தைக் கையால் மூடிக் கொண்டு விம்மினார். ஆனால் சீக்கிரம் கையை எடுத்துவிட்டு, 'ஐயா! இன்று ஒரு நாளைக்கு எனக்கு அவகாசம் கொடுங்கள். என் உடம்பும் உள்ளமும் சோர்ந்து போயிருக்கிறது. இப்போது நான் புறப்பட எண்ணினாலும் ஒரு அடி கூட என்னால் எடுத்து வைக்க முடியாது. நாளைக்கு முடிவாகச் சொல்கிறேன்' என்றார். நானும் அவருக்கு ஒரு நாள் அவகாசம் கொடுப்பது நல்லது என்று எண்ணி, 'ஆகட்டும், அம்மா! ஒரு நாளில் ஒன்றும் குடி முழுகிப் போகவில்லை. நாளைக்கே முடிவு செய்யலாம்' என்று சொன்

னேன். ஆனால் நாளைக்கு என்ன நேரப்போகிறதென்பதைப் பாவியேன் அறிந்திருக்கவில்லை!......''

சத்ருக்னன் கூறிய வரலாற்றைக் கேட்பதில் ஆரம்பத்தில் பொறுமை குன்றியிருந்த மாமல்லர் போகப் போக மிகக் கவனத்துடனும் ஆவலுடனும் கேட்கலானார். சிவகாமியின் துயரமும், ஆத்திரமும், மற்றப் பெண்களின் கதி விஷயத்தில் அவள் காட்டிய கருணையும் மாமல்லருடைய இதயத்தைக் கனியச் செய்து அவளிடத்தில் அவர் கொண்டிருந்த அன்பையும் மரியாதையையும் பன்மடங்கு அதிகமாக்கின. சளுக்கர்களைப் பழி வாங்குவது பற்றிச் சிவகாமி கூறியதைக் கேட்டவுடன் அவருடைய மனதில் அது விஷயத்தில் இருந்த ஆத்திரம் இன்னும் வேகம் அடைந்து பொங்கியது. "ஆம், சிவகாமி, ஆம்! உன் கண் முன்னால் அந்தப் பாதகர்களைப் பழி வாங்குவேன்!'' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார்.

இவ்விதம் சத்ருக்னன் கடைசியாகக் கூறியது கூடக் காதில் ஏறாதபடி தமக்குள் எண்ணமிடத் தொடங்கியவர், அவன் சற்று பேச்சை நிறுத்தியதும், திடுக்கிட்டு வெளி உலகப் பிரக்ஞையடைந்து "என்ன சொன்னாய், சத்ருக்னா? ஆகவே, சிவகாமி உன்னுடன் வர மறுத்து விட்டாளா? அதனால் நீ மட்டும் புறப்பட்டுத் தப்பித்து வந்து விட்டாயா?'' என்று கேட்டார்.

"இல்லை, பிரபு, இல்லை! அப்படிச் சிவகாமி தேவியை விட்டு நானாகக் கிளம்பி ஓடிவந்து விடவில்லை. உண்மையில், எனக்கு அவரைச் சளுக்கரிடம் விட்டுவிட்டு வர இஷ்டமே யிருக்கவில்லை. ஆனால், என்ன நடந்ததென்று கேளுங்கள். மறுநாள் இராத்திரி எப்படியாவது அவருடைய மனதைத் திருப்பி அவரையும் அழைத்துக் கொண்டு திரும்பலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் மறு நாள் மாலை நான் சற்றும் எதிர்பாராத சம்பவம் நடந்து விட்டது. சளுக்க சக்கரவர்த்தி புலிகேசி பொன்முகலி யாற்றைக் கடந்து வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார். அவருடன் ஒரு சிறு சைனியமும் வந்தது. தளபதி சசாங்கனை ஆற்றின் தென் கரையில் நிறுத்தி விட்டு இவர் மட்டும் முன்னால் செல்லத் தீர்மானித்து வந்திருக்கிறார் என்று ஊகித்தேன். அதன்படியே அன்று இரவுக்கிரவே எல்லாரும் வடக்கு நோக்கிப் பிரயாணமானோம். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் துக்கத்தையும் சொல்ல முடியாது. வழியில் சிவகாமி தேவியோடு தனியாயிருக்க நேர்ந்த போது, 'அம்மா! இப்படிச் செய்து விட்டீர்களே!' என்றேன். 'நானா செய்தேன்! விதி இப்படி இருக்கும் போது நான் என்ன செய்வேன்?' என்றார் சிவகாமி. இரண்டு நாள் பிரயாணத்திற்குப் பிறகு மூன்றாவது நாள் திருவேங்கட மலையின் அடிவாரத்தில் சென்று தங்கினோம். முதல் இரண்டு நாள் பிரயாணத்தில் புலிகேசி நாங்கள் தங்கியிருந்த பக்கம் வரவேயில்லை. மூன்றாம் நாள் மாலை நாங்கள் ஒரு பாறையின் பக்கத்தில் தங்கியிருந்தோம். சமீபத்தில் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்டது. எங்களைக் காவல் புரிந்தவர்களின் முகபாவத்திலிருந்து சக்கரவர்த்தி அந்தப் பக்கமாக வருகிறார் என்று அறிந்து கொண்டோம். அவ்விதமே சிறிது நேரத்துக் கெல்லாம் புலிகேசியும் இன்னும் சில குதிரை வீரர்களும் அந்தப் பாறையின் திருப்பத்தில் வந்து நின்றார்கள். சக்கரவர்த்தி குதிரை மேலிருந்து இறங்கி எங்கள் அருகில் வருவாரோ என்று நான் எதிர்பார்த்தேன். அவ்விதம் நடக்கவில்லை. சற்று நின்று பார்த்துவிட்டுச் சக்கரவர்த்தி குதிரையைத் திருப்ப யத்தனித்த போது நான் சற்றும் எதிர்பாராத அதிசயச் சம்பவம் நடைபெற்றது. பிரபு! கண்ணை மூடித் திறக்கும் நேரத்தில் சிவகாமி பெண்கள் கூட்டத்தின் மத்தியிலிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடினார். ஓடி, புலிகேசியின் குதிரைக்கு அருகில் சென்று, 'சக்கரவர்த்தி! ஒரு விண்ணப்பம்!' என்று உரத்த குரலில் அலறினார். நான் ஏற்கெனவே அந்தப் பெண்கள் கூட்டத்தின் முனையில் வந்திருந்தபடியால் அந்த அதிசயக் காட்சியை நேரில் பார்க்க முடிந்ததுடன், சம்பாஷணையும் என் காதில் நன்றாய்க் கேட்டது.

சிவகாமி தேவியின் அலறலைக்கேட்டு, அந்தக் கல் நெஞ்சர் புலிகேசியின் மனம்கூட இளகியிருக்க வேண்டும். உடனே, புலிகேசி குதிரையிலிருந்து கீழே குதித்துச் சிவகாமியின் அருகில் வந்தார். 'பெண்ணே! என்ன விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டும்?' என்று கேட்டார். ஆகா! அப்போது சிவகாமி தேவியின் வாக்கிலிருந்து வந்த ஆவேச மொழிகளை எவ்விதம் வர்ணிப்பேன்! அத்தனை தைரியமும் சாமர்த்தியமும் வாக்கு வன்மையும் அவருக்கு எங்கிருந்துதான் வந்ததோ அறியேன். கம்பீரமாகப் புலிகேசியை நிமிர்ந்து பார்த்து, தழுதழுத்த குரலில், சிவகாமி அம்மை கூறிய மொழிகளை ஏதோ எனக்கு ஞாபகம் உள்ள வரையில் கூறுகிறேன்:

'ஐயா! பூமண்டலத்தை ஆளும் மன்னர்களாகிய நீங்கள், உங்களுடைய வீரத்தையும் புகழையும் நிலைநாட்டிக் கொள்ள யுத்தம் செய்கிறீர்கள். இன்றைக்கு எதிரிகளாயிருக்கிறீர்கள்; நாளைக்குச் சிநேகிதர்களாகிறீர்கள். இன்றைக்கு ஒருவருடைய அரண்மனையில் இன்னொருவர்



விருந்தாளியா யிருக்கிறீர்கள்; மறுநாள் போர்க்களத்தில் யுத்தம் செய்கிறீர்கள். உங்களுடைய சண்டையிலே ஏழைப் பெண்களாகிய எங்களை ஏன் வாட்ட வேண்டும்? உங்களுக்கு நாங்கள் என்ன கெடுதல் செய்தோம்? கருணை கூர்ந்து எங்களை யெல்லாம் திருப்பி அனுப்பி விடுங்கள். இங்கே சிறை பிடித்து வைத்திருக்கும் பெண்களில் சிலர் கைக்குழந்தைகளைக் கதற விட்டுவிட்டு வந்திருக்கிறார்கள். இரவு பகல் அவர்கள் அழுது புலம்பிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் அநேகர் கையிலே கட்டிய திருமணக் கங்கணத்துடன் சிறை பிடிக்கப்பட்டவர்கள். சுவாமி! இவர்களை யெல்லாம் நீங்கள் விடுதலை செய்து அனுப்பாவிட்டால், தங்களுடைய தலைநகரமாகிய வாதாபியை அடைவதற்குள் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்து விடும். திக்விஜயம் செய்து விட்டுத் தலை நகருக்குத் திரும்பும்போது



சித்தப் பிரமை பிடித்த ஆயிரம் ஸ்திரீகளை அழைத்துக் கொண்டு போவீர்களா? அதில் உங்களுக்கு என்ன லாபம்? என்ன சந்தோஷம்? அதற்கு மாறாக ஆயிரம் பெண்கள் மனமார வாயாரத் தங்களை வாழ்த்திக் கொண்டு வீடு திரும்பும்படி செய்யுங்கள்!' — இப்படிக் கல்லுங் கரையுமாறு சிவகாமிதேவி கேட்டதற்கு அந்தக் கிராதகன் என்ன மறுமொழி சொன்னான் தெரியுமா? 'பெண்ணே! உன்னுடைய பாவ அபிநயக் கலை சாமர்த்தியங்களையெல்லாம் நாட்டியக் கச்சேரியில் காட்ட வேண்டும்; இங்கே போர்க்களத்திலே காட்டி என்ன பிரயோஜனம்?' என்றான் அந்த ரஸிகத்தன்மையற்ற நிர்மூடன்......"

சத்ருக்னன் இவ்வாறு சொன்ன போது, மாமல்லர் ஒரு நெடு மூச்சு விட்டு, "ஆகா! ஆயனரின் மகள் நீசனிடம் போய்க் காலில் விழுந்து வரம் கேட்டாள் அல்லவா? அவளுக்கு வேண்டியதுதான்!" என்று கொதிப்புடன் கூறினார்.

சத்ருக்னன் மேலே சொன்னான்:— "ஆம், பிரபு! சிவகாமி தேவியும் தங்களைப் போல் எண்ணமிட்டதாகவே தோன்றியது. புலிகேசியின் மறுமொழியைக் கேட்டு அவர் தலையைக் குனிந்து கொண்டார். சிறிது நேரம் தரையைப் பார்த்த வண்ணம் இருந்தார். அப்போது அந்தச் சண்டாளப் பாவி, 'பெண்ணே! உன் அபிநய சாகஸத்தைக் கண்டு நான் ஏமாந்து விடமாட்டேன். ஆனால் உன் பேச்சில் கொஞ்சம் நியாயம் இருக்கிறது. ஆகையால் உன் வேண்டுகோளை நிறைவேற்ற இணங்குகிறேன். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை இருக்கிறது. நீ இந்தப் பெண்களுக்காக ரொம்பவும் இரங்கிப் பேசினாய். உன்னுடைய இரக்கம் பாசாங்கு இல்லை, அபிநயம் இல்லை—என்பதை நீ நிரூபிக்க வேண்டும். இவர்கள் கட்டிய கணவனைப் பிரிந்து வந்தவர்கள், கைக் குழந்தைகளைப் பிரிந்து வந்தவர்கள் என்று சொன்னாயல்லவா? ஆனால் உனக்குக் கணவனும் இல்லை, குழந்தையும் இல்லை. நீ என்னுடன் வாதாபிக்குச் சந்தோஷமாய் வருவதற்குச் சம்மதிக்கிறாயா, சொல்லு! சம்மதித்தால் உன்னைத் தவிர இவர்கள் எல்லாரையும் இந்த க்ஷணமே விடுதலை செய்து அனுப்பி விடுகிறேன்' என்றான். அதைக் கேட்ட எனக்கு அந்தப் பாவியை அங்கேயே கொன்று விடலாமா என்று தோன்றியது."

மாமல்லர் குறுக்கிட்டு, "நிபந்தனைக்குச் சிவகாமி சம்மதித்தாளா?" என்று குரோதம் ததும்பிய குரலில் கேட்டார்.

"ஆம், பிரபு! சிவகாமி தேவி ஒரு கணம் கூடத் தாமதிக்கவில்லை. உடனே எழுந்து நின்று, 'சம்மதம், சக்கரவர்த்தி! நிபந்தனையை ஒப்புக் கொள்கிறேன்' என்றார். சுவாமி! அச்சமயம் சிவகாமி தேவி நின்ற நிலையும், அவருடைய முகத்தோற்றமும் மனுஷ இயற்கைக்கு ஒத்ததாயில்லை; தெய்விகமாயிருந்தது! இராவணனுக்கு முன்னால் நின்ற சீதையையும், துரியோதனன் சபையில் நின்ற பாஞ்சாலியையும், யமன் முன்னால் வாதாடிய சாவித்ரியையும், பாண்டியன் முன்னால் நின்ற கண்ணகியையும் ஒத்து அச்சமயம் ஆயனரின் திருக்குமாரி விளங்கினார்!........"

"சத்ருக்னா! உன்னுடைய பரவச வர்ணனை அப்புறம் இருக்கட்டும். பின்னர் என்ன ஆயிற்று?" என்று மாமல்லர் கேட்டார்.

"சற்று நேரத்துக்கெல்லாம் சக்கரவர்த்தி எங்களை விடுதலை செய்யும்படி கட்டளையிட்டார். பொன்முகலி ஆறு வரையில் எங்களைத் திரும்பக் கொண்டு போய் விட்டுவிடும்படியும் சில வீரர்களுக்கு ஆக்ஞாபித்தார். அவ்வளவு நாளும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாயிருந்த ஸ்திரீகள் எல்லாரும் இப்போது ஒரே சந்தோஷத்தில் ஆழ்ந்தார்கள். சிவகாமியைத் தலைக்குத் தலை வாழ்த்தினார்கள். ஆனால் எனக்கு இடிவிழுந்ததுபோலிருந்தது. சிவகாமியின் காலில் விழுந்து 'அம்மா! உங்களை விட்டு நான் போகமாட்டேன். சக்கரவர்த்தியிடம் மறுபடி வரங்கேட்டு என்னை உங்களுடனே வைத்துக் கொள்ளுங்கள்' என்றேன். சிவகாமி ஒரே பிடிவாதமாக 'நீதான் முக்கியமாய்ப்

போக வேண்டும். என் தந்தையிடம் போய்ச் செய்தி சொல்ல வேண்டும்' என்றார். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. ஒரு பக்கம் சளுக்க வீரர்கள் அவசரப்படுத்தினார்கள். கடைசியில் வேறு வழியில்லை யென்று நானும் புறப்படத் தீர்மானித்தேன். மேலும் அங்கே தாமதித்தால் என்னுடைய வேஷம் வெளிப்பட்டுச் சிவகாமிக்கும் உபயோகமில்லாமல் இங்கே வந்து செய்தி சொல்லவும் முடியாமல் போய் விடலாம் என்று பயந்தேன். ஆகவே, 'தங்களிஷ்டம் அதுவானால் போகிறேன், தேவி! அப்பாவுக்கு என்ன செய்தி சொல்லட்டும்?' என்று கேட்டேன். 'என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும், வாதாபியில் நான் சௌக்யமா யிருப்பேன் என்றும் சொல்லு. எப்போதாவது வாதாபியிலிருந்து நான் திரும்பி வந்தால், அஜந்தா வர்ண இரகசியத்தையும் தெரிந்து கொண்டு வருவேன் என்று கூறு' என்றார் ......"

இவ்விதம் சத்ருக்னன் சொன்னதும் ஆயனர் துள்ளும் உற்சாகத்துடனே "பார்த்தீர்களா, பல்லவ குமாரா? சிவகாமி சௌக்யமா யிருக்கிறாள். அதோடு அஜந்தா வர்ண இரகசியத்தையும் அறிந்து கொண்டு வருவதாகச் சொல்கிறாள். அதற்காக நாம் பரஞ்சோதியை அனுப்பியதெல்லாம் வீணாய்ப் போய்விட்டதல்லவா? என் அருமைக் குமாரியினால் என் மனோரதம் நிறைவேறப் போகிறது. இதுமட்டுமல்ல. வாதாபி சக்கரவர்த்தியைப் பற்றி நமது எண்ணத்தைக்கூட மாற்றிக் கொள்ள வேண்டி யிருக்கிறது. அவர் ரஸிகத்தன்மை அற்றவர், கலை உணர்ச்சியே இல்லாதவர் என்று எண்ணிக் கொண்டிருந்தோமே? அப்படி யிருந்தால், ஆயிரம் பெண்களைத் திருப்பி அனுப்பி விட்டுச் சிவகாமியை மட்டும் அழைத்துப் போயிருப்பாரா? பிரபு! ...... எனக்கு மட்டும் உடம்பு சௌகரியமாக வேண்டும். ஆனவுடன் நானே கிளம்பி வாதாபிக்குப் போகிறேன் ......"

ஆயனரின் மேற்படி வார்த்தைகள் எல்லாம் மாமல்லரின் செவிகளில் நாராசம் போல் விழுந்து கொண்டிருந்தன. புலிகேசியின் நிபந்தனைக்கு இணங்கிச் சிவகாமி வாதாபிக்குப் போகச் சம்மதித்தாள் என்றதுமே மாமல்லரை ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் கொட்டுவது போலிருந்தது. சிவகாமியிடம் அவர் உள்ளத்தில் கொண்டிருந்த பரிசுத்தமான அன்பில் ஒரு துளி நஞ்சு அப்போது கலந்தது என்றே சொல்ல வேண்டும். சிவகாமி மனமுவந்து புலிகேசியுடன் வாதாபிக்குச் செல்லச் சம்மதித்தாள் என்னும் எண்ணத்தை அவரால் சகிக்கவே முடியவில்லை. இந்த எண்ணத்தினால் புண்பட்டிருந்த அவருடைய இருதயத்தில் கூரிய வேலை நுழைப்பது போலிருந்தது ஆயனரின் பேச்சு.

**மா**மல்லர் அப்போது தனிமையை விரும்பினார். அந்தப் பழைய தாமரைக் குளத்துக்குப் போக வேண்டுமென்று அவருக்கு விருப்பம் உண்டாயிற்று. எனவே, சட்டென்று ஒரு துள்ளலில் எழுந்து நின்று, "சத்ருக்னா! அவ்வளவுதானே விஷயம்? சிவகாமி வேறு எந்தச் செய்தியும் அனுப்பவில்லை யல்லவா?" என்றார்.

"பிரபு! இன்னொரு செய்தியும் இருக்கிறது" என்று சத்ருக்னன் கூறித் தயக்கத்துடன் ஆயனரைப் பார்த்தான். அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதைப் பார்த்த பின்னர், சிறிது தாழ்ந்த குரலில், "பல்லவ குமாரா! சிவகாமி தேவி தங்களுக்கும் என்னிடம் ஒரு செய்தி சொல்லி அனுப்பினார். வேலின் மீது ஆணையிட்டுக் கூறிய வாக்குறுதியைத் தங்களுக்கு ஞாபகப்படுத்தச் சொன்னார். சீதாதேவி இலங்கையில் காத்திருந்ததுபோல் தாங்கள் வாதாபிக்கு வந்து அவரை அழைத்துப் போகும் வரையில் காத்திருப்பே னென்று சொல்லச் சொன்னார்" என்றான்.

சற்றுமுன் மாமல்லருக்கு இவ்வுலக வாழ்க்கையானது ஒரு சூனியமான வறண்ட பாலைவனமாகக் காணப்பட்டது. இப்போது அந்தப் பாலைவனத்தில் பசுமையான ஜீவ பூமி ஒன்றும் இருப்பதாகத் தோன்றியது.

# நாமக்கல் கவிஞர் நிதி

## ஆகஸ்டு 11உ சென்னையில் நிதியளிப்பு வைபவம்

நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை அவர்களுக்கு நிதி அளிப்பு வைபவக் கூட்டம் சென்னையில் வரும் ஆகஸ்டுமீ 11உ சனிக்கிழமை ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்களின் தலைமையில் நடைபெறும். ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலிய பல அறிஞர்கள் இவ் வைபவத்தில் கலந்து கொள்வார்கள். தமிழன்பர்கள் பெருந் திரளாக விஜயம் செய்து வைபவத்தைச் சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப் படுகிறது.

★

### பங்களூரில் நடந்தது

பங்களூர் ஸர் புட்டண்ண செட்டி மண்டபத்தில் சென்ற ஜூலை மீ 21உ ஒரு விசேஷ வைபவம் நடைபெற்றது. நாமக்கல் கவிஞரைக் கௌரவிப்பதற்கும் நிதி முடிப்பு அளிப்பதற்கும் பங்களூரிலுள்ள தமிழர்கள் பெருந் திரளாகக் கூடியிருந்தார்கள். இந்த வைபவத்துக்காகத் தமிழ் நாட்டிலிருந்தும் பல பிரமுகர்கள் வந்திருந்தார்கள். டாக்டர் சுப்பராயன் அவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். ஸர் ஸி. வி. ராமனின் மனைவியார் ஸ்ரீமதி லோகசுந்தரி ராமன், பங்களூர்த் தமிழர்களின் சார்பாக ரூ. 3000 மும் ஒரு தங்க சவரனும் அடங்கிய பண முடிப்பை நாமக்கல் கவிஞருக்கு அளித்தார்.

கவிஞரின் நூல்களை அழகான முறையில் பதிப்பித்து அரிய தமிழ்த் தொண்டு செய்திருக்கும் தமிழ்ப் பண்ணை ஸ்ரீ அண்ணாமலை, சென்னை காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ சிவஞான கிராமணியார், "கல்கி" ஆசிரியர், காரைக்குடி ஸ்ரீ சா. கணேசன், "தியாகி" ஆசிரியர் ஸ்ரீ ராமசடகோபன், ஆசிரியர் சீனிவாச ராகவன், ஸ்ரீ திரிகூடசுந்தரம் பிள்ளை முதலியவர்கள் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையின் குணநலங்களைப் பாராட்டியும், அவருடைய கவிதையின் விசேஷங்கள், அவருடைய வாழ்க்கைச் சம்பவங்கள் ஆகியவற்றைக் குறித்தும் பேசினார்கள்.

பங்களூர் மல்லேசுவரத்தில் பல்லாயிரக் கணக்கான தமிழ்த் தொழிலாளிகள் குடியேறியிருக்கிறார்கள். இவர்களுடைய குழந்தைகளுக்குத் தமிழில் கல்வி போதிப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு மல்லேசுவரத்தில் சேவாசிரமம் என்னும் மிகச் சிறந்த ஸ்தாபனம் ஒன்று நடைபெற்று வருகிறது. இந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ சதானந்தம் அவர்களுடைய பெரு முயற்சியினாலேயே மேற்படி பாராட்டு வைபவம் இவ்வளவு சிறப்பாக நடந்தது என்று சொல்லவேண்டும். மேற்படி வைபவத்தின் மூலமாகப் பங்களூரிலுள்ள தமிழர்களிடையே எவ்வளவு தமிழன்பு குடிகொண்டிருக்கிறது என்பதும் வெளியாயிற்று.

★

### டி. கே. எஸ். நன்கொடை

திருச்சியில் புகழுடன் நாடகம் நடத்தி வரும் டி. கே. எஸ். சகோதரர்கள் தங்களுடைய தமிழன்பை மீண்டும் ஒருமுறை சிறந்த முறையில் காட்டியிருக்கிறார்கள். 19-7-45ல் ஸ்ரீ வெ. சாமிநாத சர்மா அவர்களின் தலைமையில் நடைபெற்ற "ஔவையார்" நாடகத்தின் வசூல் தொகை ரூ. 1169-8-0 யும் அவர்கள் நாமக்கல் கவிஞர் நிதிக்காக மேற்படி நிதியின் பொக்கிஷதாருக்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள்.

★

### காரைக்குடியில் உதவி நாடகம்

பள்ளத்தூரைச் சேர்ந்த சில தமிழன்பர்கள் சென்ற 29-7-45 அன்று காரைக்குடி கிருஷ்ணா டாக்கீஸில் 'தியாகி' என்ற நாடகத்தை நடத்தப் போகிறார்களாம். இதில் வசூலாகும் தொகை முழுதும் நாமக்கல் கவிஞர் நிதிக்குச் சேரும் என்று அறிவிக்கப்படுகிறது. செட்டி நாட்டிலுள்ள நாமக்கல் கவிஞரின் அன்பர்கள் இந்த அரிய சந்தர்ப்பத்தை நன்கு பயன்படுத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.

---

சென்ற இதழில் வெளியான கலைஞானப் புதிருக்குப் பரிசு பெற்றவர்: எஸ். பாண்டிப் பெருமாள், 6. 3, பவர் ஹவுஸ் ரோடு, மதுரை.



## இந்தியத் தேயிலையில்

# *மிகச்சிறந்தது*

மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள




லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.

# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 64 W

# ஐந்தாம் நாள்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"கைகளால் நீந்துகின்ற ஒருவன் கடலைத் தாண்டி அக்கரையை அடைய முடியாததைப்போல் இந்த துக்கத்தின் அக்கரையை நான் காணப்போவதில்லை" என்றான் திருதராஷ்டிரன்.

யுத்தகளத்தில் அவ்வப்போது நடைபெற்றதை யெல்லாம் சஞ்சயன் கண்ணில்லாத கிழ அரசனுக்குச் சொல்லி வரும்போது துக்கத்தைத் தாங்க முடியாமல் அவன் பிரலாபித்தான்.

"என் புத்திரர்கள் அனைவரையும் பீமன் கொல்லப்போகிறான். அவர்களைக் காப்பாற்றக்கூடிய வீரன் நம்முடைய சேனையில் யாரும் இருப்பதாக நான் எண்ணவில்லை. யுத்தத்தில் நம்முடைய சேனை பயந்து ஓடியதை பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அசுவத்தாமாவும் சும்மா பார்த்துக் கொண்டிருந்தார்களா? அவர்கள் என் மகனுக்கு என்ன உதவி செய்யப் போவதாக எண்ணி இருக்கிறார்கள்? என் புத்திரர்கள் எவ்வாறு மிஞ்சப் போகிறார்களோ?" என்று சொல்லிக் கிழவன் அழுதான்.

"அரசனே! சாவதானமாக இருக்க வேண்டும். பாண்டவர்கள் தருமத்தில் நிற்கிறார்கள். ஆனபடியால் யுத்தத்தில் வெற்றி பெறுகிறார்கள். உம்முடைய புத்திரர்கள் வீரர்களாயினும் கெட்ட எண்ண முடையவர்கள். ஆனபடியால் க்ஷீணதசை யடைகிறார்கள். அவர்கள் பாண்டவர்களுக்கு அனேக அபகாரங்கள் செய்திருக்கின்றார்கள். அந்தச் செயல்களின் பயனை இப்போது அனுபவிக்கிறார்கள். பாண்டவர்கள் மந்திரமாவது மாயமாவது ஒன்றும் செய்யவில்லை. க்ஷத்திரியர்கள் யுத்தம் செய்கிற முறையில்தான் செய்து வருகிறார்கள். நியாய வழியில் நின்றபடியால் பலம் பெற்றிருக்கிறார்கள். மித்திரர்கள் சொன்னதை நீர் கேட்கவில்லை. விதுரரும் பீஷ்மரும் துரோணரும் நானும் தடுத்தபோது உம்முடைய வழியிலேயே சென்றீர். சாகப் போகும் நோயாளி மருந்தைச் சாப்பிட மாட்டேன் என்று மூர்க்கமாக நடந்து கொள்வதைப்போல் நீர் மகனுடைய அபிப்பிராயத்துக்கு இணங்கிக் குலத்துக்குப் பத்தியமான சொல்லை ஏற்றுக்



கொள்ளவில்லை. இப்போது தவிக்கிறீர். துரியோதனனும் நான்காம் நாள் இரவில் உம்மைப் போலவே பீஷ்மரைக் கேட்டான். அவர் சொன்னதைக் கேளும்" என்று சொல்லிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தான் சஞ்சயன்.

* * *

நான்காம் நாள் யுத்தம் முடிந்த பின் இரவில் பிதாமகரிடம் தனியாகச் சென்று துரியோதனன், "துரோணரும் கிருபரும் அசுவத்தாமாவும், கிருதவர்மாவும், சுதக்ஷிணனும், பூரிசிரவஸும், விகர்ணனும், பகதத்தனும், நீரும் யமனுக்குப் பயந்தவர்கள் அல்லவென்பது உலகத்துக்கெல்லாம் தெரியும். உங்களுடைய வல்லமைக்கு வரம்பே இல்லை என்பதில் சந்தேகமில்லை. பாண்டவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தாலும் உங்களில் ஒருவரை வெல்ல முடியாது. இப்படியிருந்தும் குந்தி புத்திரர்கள் நம்மைத் தினமும் தோற்கடித்து வருவதின் ரகசியம் என்ன?" என்று மிகவும் வணக்கமாகக் கேட்டான்.

பீஷ்மர், "ராஜனே! நான் சொல்லுவதைக் கேள். பலவிதத்தில் உனக்கு நான் இதத்தைச் சொன்னேன். நீ பெரியோர் சொன்னதைச் செய்யவில்லை. பாண்டவர்களிடம் நீ சமாதானமாகப் போவதே நலம். அவ்வாறு செய்வது உனக்கும் உலகத்துக்கும் நல்லது. ஒரே குலத்தைச் சேர்ந்த நீங்கள் இந்த ராஜ்யத்தைச் சுகமாக அனுபவிக்கலாம். இவ்வாறு நான் உனக்கு முன்னமே சொன்னதை நீ கேட்கவில்லை. பாண்டவர்களை அவமதித்தாய். அதன் பயனை அடைகிறாய். ஸ்ரீ கிருஷ்ணனாலே காக்கப்பட்டிருக்கும் பாண்டவர்கள் வெற்றியடைவதில் சந்தேகமில்லை. இப்பொழுது நீ சமாதானமாகப் போகலாம். பலசாலிகளான சகோதரர்களைச் சிநேகம் செய்து கொண்டு பூமியை அனுபவிக்கலாம். நரநாராயணர்களாகிய கிருஷ்ணனையும் தனஞ்சயனையும் அவமதித்தாயானால் நீ நாசமடைவாய்" என்று சொன்னார். துரியோதனன் விடைபெற்றுக் கொண்டு தன் இருப்பிடம் சென்று அழகிய படுக்கையில் படுத்தான். ஆனால் தூக்கம் வரவில்லை.

* * *

மறுநாள் பொழுது விடிந்தவுடன் பழையபடி இரண்டு படைகளும் யுத்தத்துக்கு நின்றன. பீஷ்மர் கௌரவ சேனையைப் பலமாக வியூகப்படுத்தினார். பாண்டவ சேனையும் யுதிஷ்டிரரால் நன்றாக வியூகப்படுத்தப்பட்டிருந்தது. பீமசேனன் வழக்கம்போல் முன்னணியில் நின்றான். சிகண்டியும் திருஷ்டத்யும்னனும் சாத்யகியும் அடுத்தாற்போல் சேனையைக் காத்து நின்றார்கள். மற்ற வீரர்கள் அதற்கும் பின் புறமாக நின்றார்கள். அனைவருக்கும் பின் தருமபுத்திரனும் நகுல சகதேவர்களும் இருந்தார்கள்.

பீஷ்மர் வில்லை வளைத்து அஸ்திரங்களை விட ஆரம்பித்தார். பாண்டவ சேனையைக் கவலை அடையச் செய்தார். சேனை கதறுவதைப் பார்த்த தனஞ்சயன் பீஷ்மரைப் பல அம்புகளால் துன்புறுத்தினான்.

துரியோதனன் தன் வழக்கம் போல் துரோணரிடம் சென்று தாக்கிப் பேசிக் கோபமூட்டினான். அவர் "மூர்க்கனே! பாண்டவர்களுடைய பராக்கிரமத்தை அறியாமல் நீ பேசுகிறாய். ஆயினும் என்னால் வஞ்சனையில்லை" என்று சொல்லிப் பாண்டவ சேனையைப் பலமாகத் தாக்கினார். சாத்யகிக்கும் துரோணருக்கும் பயங்கரமான யுத்தம் நடந்தது. சாத்யகி துரோணருடைய தாக்குதலைத் தாங்க முடியாமலிருந்ததைக் கண்டு பீமசேனன் துரோணரைத் தாக்கினான்.

அதன் மேல் யுத்தம் இன்னும் அதிக வேகம் கொண்டது. துரோணரும் பீஷ்மரும் சல்யனும் சேர்ந்து பீமனை எதிர்த்தார்கள். அச்சமயம் சிகண்டி பீஷ்மர் பேரிலும் துரோணர் பேரிலும் அம்புமாரி பொழிந்தான். சிகண்டி நுழைந்ததும் பீஷ்மர் விலகிச் சென்றார். சிகண்டி ஆண் பிறப்பல்ல என்றும், பெண்ணாகப் பிறந்து வளர்ந்தவன் என்றும், க்ஷத்திரியனுக்குப் பெண்ணோடு போர் புரிவது அதருமம் என்றும் பீஷ்மருடைய கொள்கை. இதுவே பிதாமகருடைய மரணத்துக்கும் காரணமாகும் என்று விதிக்கப்பட்டிருந்தது.

துரோணர் சிகண்டியை எதிர்த்தார். மகாரதனான சிகண்டியினால் துரோணருடைய எதிர்ப்பைத் தாங்க முடியவில்லை. எனவே, பின் திரும்பினான்.

முற்பகல் முழுதும் கோரமான சங்குல யுத்தம் நடந்தது. சேனை முழுதும் கைகலந்து இரு பக்கத்திலும் வரம்பற்ற கொலை நடந்தது. பிற்பகலில் துரியோதனன் சாத்யகியை எதிர்க்கப் பெரும் படையை அனுப்பினான். சாத்யகி அந்தப் படையை முற்றிலும் நாசம் செய்து விட்டுப் பூரிசிரவஸைத் தேடி எதிர்த்தான். அவனோ மகா பராக்கிரமசாலி. சாத்யகியின் படையைத் தாக்கி அவர்கள் அனைவரும் புறங்காட்டி ஓட்டம் பிடிக்கச் செய்தான். சாத்யகி ஒருவனே நின்றான்.

சாத்யகியின் நிலைமையைப் பார்த்து அவனுடைய பத்து குமாரர்களும் வந்து பூரிசிரவஸைத் தாக்கினார்கள்.

ஒன்று கூடி வந்த அந்தப் பத்து வீரர்களையும் பூரிசிரவஸ் ஒருவனே எதிர்த்துப் போர் புரிந்தான். பத்துப் பேரும் அவனைச் சூழ்ந்து கொண்டு சரமாரி பொழிந்தார்களாயினும் அவன் அவர்களுடைய விற்களைத் தன் அம்புகளால் சேதித்து அவர்கள் பதின்மரையும் யமாலயம் அனுப்பினான். சாத்யகியின் பத்து குமாரர்களும் இடிவிழுந்த மரங்களைப்போல் யுத்த களத்தில் விழுந்தார்கள். தன் புத்திரர்கள் கொன்று வீழ்த்தப் பட்டதைக் கண்ட சாத்யகி பூரிசிரவஸின்மேல் பாய்ந்தான். இருவருடைய ரதங்களும் உடைந்து நாசமாயின. கத்தியும் கேடயமுமாகத் தரையில் நின்று இருவரும் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். அந்தச் சமயம் பீமசேனன் அவ்விடம் வந்து சாத்யகியின் முன் நின்று யுத்தத்தைத் தடுத்து அவனைத் தன் தேரில் ஏற்றிக் கொண்டு போய் விட்டான். கத்திச் சண்டையில் யாரும் பூரிசிரவஸை ஜெயிக்க முடியாது என்று பீமனுக்குத் தெரியும். ஆகையால் இவ்வாறு சாத்யகியைத் தடுத்தான்.

அன்று மாலை ஆயிரக்கணக்கில் வீரர்கள் அருச்சுனனால் வதம் செய்யப்பட்டார்கள். பார்த்தனை எதிர்த்துக் கொல்லுவதற்காகத் துரியோதனன் அனுப்பிய படை வீரர்கள் அவ்வளவு பேரும் நெருப்பில் பூச்சிகள் விழுந்து சாவது போல் மாண்டார்கள். பாண்டவ சேனையிலிருந்த அரசர்கள் தனஞ்சயனைச் சூழ்ந்து கொண்டு ஜெய கோஷம் செய்தார்கள். அச் சமயம் சூரியன் மறைந்தான். பீஷ்மரின் கட்டளைப்படி களைப்புற்ற குதிரைகளும் யானைகளுமாக எல்லாரும் யுத்த பூமியை விட்டுச்சென்றார்கள்.












குறுகுறுத்த பார்வை, பொக்கைவாய்ச் சிரிப்பு,
தளுதளுத்த புஷ்டியின் அம்சம்
ஆரோக்கியம்



குழந்தைகளுக்கு ஆரோக்கியம் தரும் ஆகாரம்

# பெரீஸ் பிஸ்கட்ஸ்

**MANUFACTURED BY PERRY & CO., USILAMPATTI.**

# பெண் பார்த்த படலம்

## ஸோமாஸ்

"பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி முகூர்த்தம் மேற்படி இடத்தில் நடக்கிறபடியால்......" என்று எந்த விவாக முகூர்த்தப் பத்திரிகையில் படித்தாலும் நாராயணனுக்கு மூக்கு மாத்திரம் துடிக்காது; உதடுகளும் துடிக்கும்.

"பெரியோர்கள் என்ன வேண்டிக் கிடக்கிறது! பெரியோர்களா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார்கள்?" என்று ஆத்திரத்துடன் குமுறுவான் நாராயணன். நாராயணனுக்குப் பழைய கர்நாடகமான வழக்கங்களெல்லாம் கொஞ்சமும் பிடிப்பதில்லை.

தகப்பனார் பார்த்து நிச்சயம் செய்த எத்தனையோ பெண்களை நாராயணன் நிராகரித்து விட்டான். தகப்பனார் பார்த்து நிச்சயம் செய்யும் பெண், அழகில் ரதியைப் பழித்தாலும் சரி, குரலில் குயிலைப் பழித்தாலும் சரி—அவளைக் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாதென்று மறுத்துக் கொண்டே வந்தான் நாராயணன்.

இந்த மாதிரி அநேகத் தடவை நேர்ந்து விட்டமையினால் நாராயணன் தகப்பனாருக்கு அவன் கல்யாண விஷயமாகப் பேசவே வெட்கமாகப் போய்விட்டது. பெண்ணைப் பெற்றவர்களும் அவரை வான் விஷயமாக நெருக்குவதை விட்டு விட்டனர்.

நாராயணன் தகப்பனாரும் மனம் வெறுத்துப்போய் அவன் கல்யாண விஷயமாக இனித் தலையிடுவதில்லையென்று சும்மா இருந்து விட்டார். என்றாலும் பெண்ணைப் பெற்றவர்கள் சும்மா இருந்து விடுகிறார்களா?

இந்த வருஷம் கல்யாண ஸீஸன் வந்ததும் நாராயணன் தகப்பனார் அவன் கல்யாணத்தைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. ஆனால் அதற்குப் பதிலாக நாராயணனின் மாமா அவன் கல்யாண விஷயமாகச் சிரத்தை காட்டவே பெண்ணைப் பெற்றவர்கள் நாராயணனுடைய மாமாவை நாடி வந்தார்கள்.

ராவ்சாகிப் ராமநாதையர் பெண் ஊர்மிளாவின் ஜாதகமும் நாராயணன் ஜாதகமும் சகல விஷயங்களிலும் பொருந்தியிருந்தன. பெண்ணின் பெயர் ஊர்மிளா பி. ஏ. என்று தெரிந்ததில் நாராயணனுக்குக் கொஞ்சம் சந்தோஷம்தான். ஏனெனில், தனக்கு மனைவியாக வரப்போகிறவளின் பெயர் இன்னின்ன பெயராகத்தான் இருக்க வேண்டும் என்று அவன் ஏற்கெனவே ஒரு குறிப்பு தயாரித்து வைத்திருந்தான். அந்த ஜாபிதாவில் ஊர்மிளா என்னும் பெயரும் இருந்தது! அவனுக்கு அது விஷயத்தில் திருப்தியாய்த்தான் இருந்தது. இனிமேல் பெண்ணை நேரில் பார்க்க வேண்டியதுதான் பாக்கி.

ராவ் சாகிப் ராமநாதையர் பெண் ஊர்மிளாவைப் பார்க்கப் போகிறோம் என்பதை நினைக்கும்போதே நாராயணனுக்கு உதக மண்டலத்தில் இருப்பதுபோல் இருந்தது. பெரிய மனிதர் வீட்டுப் பெண். அதிலும் படித்தவள். ஆகையால் கூச்சம் இல்லாமல் நாகரிகமாக நடந்து கொள்வாள். அவளே காப்பி கொண்டு வந்து வைப்பாள். நாம் கேட்பதற்கு முன்னாலேயே கையில் வீணையையோ பிடிலையோ எடுத்து வைத்துக்கொண்டு கர்ணாம்ருதமான கானத்தைப் பொழிய ஆரம்பித்து விடுவாள் என்றெல்லாம் நினைத்துப் புளகாங்கிதமடைந்தான் நாராயணன்.



ராவ்சாகிப் ராமநாதையர் வீட்டுக்கு நாராயணனும் அவன் மாமாவும் பெண்ணைப் பார்க்கச் சென்றனர். ராமநாதையர் அவர்களை ஜாக்கிரதையாக வரவேற்று உபசரித்தார்.

நாராயணன் யாரையும் கவனிக்கவில்லை; தனக்கு நேரேயிருந்த ஜன்னலைப் பார்த்தான். அந்த ஜன்

னல் வழியாக யாரோ அவனைக் கூர்ந்து கவனிப்பது தெரிந்தது. நாராயணன் மெய் சிலிர்க்க அந்த உருவத்தை உற்றுப் பார்த்தான். சே, என்ன ஏமாற்றம்! அது ஊர்மிளா இல்லை, யாரோ பாட்டியம்மாள்!

நாராயணன் கூடத்துக்குள் நுழைந்தான். யார் யாரோ ஸோபாக்களில் உட்கார்ந்து கொண்டு வியன்னா மகாநாட்டைப் பற்றியும், சென்னையில் வீட்டு நெருக்கடியைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். நடுவில் நடுவில் இந்தப் பிரச்னைகள் விஷயமாக நாராயணனது அபிப்பிராயத்தையும் கேட்டார்கள். முக்கியமாக, அவனருகில் உட்கார்ந்திருந்த பெண் ஒருத்தி 'சள சள' வென்று பேசிக் கொண்டும், ஓயாமல் அவனைக் கேள்வி கேட்டுக் கொண்டும் இருந்தது அவனுக்கு மகா வேதனையாயிருந்தது. பெண் பார்க்க வந்தோமா, அல்லது பேட்டி யளிக்க வந்தோமா என்று அலுத்துச் சலித்துக் கொண்டான்.

அவன் ஞாபகம் எல்லாம் ஊர்மிளாவின் மீதே இருந்தது என்று சொல்லவா வேண்டும்? நாகரிகப் புன்னகை தவழ, தளர்த்திப் பின்னப் பட்டிருந்த பின்னல் ரிப்பனுடன் அசைய, ஊர்மிளாவே கையில் காப்பியுடன் நிச்சயம் வருவாள் என்று நினைத்தான்.

அட நாராயணா!' இதிலுமா ஏமாற்றம்? பரிசாரகப் பையன் ஒருவன் காப்பியைக் கொண்டு வந்து வைத்தான். வேண்டா வெறுப்பாக நாராயணன் காப்பியைக் குடித்தான்.

"உங்களுக்குச் சங்கீதம் பிடிக்குமா?" என்ற குரலைக் கேட்டுத் திரும்பிய நாராயணன் "ஆகா! பேஷாய்ப் பிடிக்கும்! மோகன ராகத்தில் 'நன்னு பாலிம்ப' என்னும் கீர்த்தனம் எனக்கு ரொம்பப் பிடிக்கும்" என்று முகத்தில் மகிழ்ச்சி பொங்க பரவசத்துடன் கூறினன்.

உடனே கணீர் என்று 'நன்னு பாலிம்ப' பாட்டு பிடிலுடன் கேட்டது. நாராயணன் உள்ளங் குளிர நிமிர்ந்து பார்த்தான். ஆனால் பாடியது ஊர்மிளா இல்லை, அவளுடைய தங்கைதான் அந்தப் பாட்டைப் பாடினள். இதை அறிந்த நாராயணன் தாங்க முடியாத ஆத்திரத்துடன் பல் வலியால் அவஸ்தைப் படுபவன் மாதிரி முகத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அதற்குள் விவாகப் பேச்செல்லாம் முடிந்து மாமா கிளம்பிவிடவே நாராயணனும் கிளம்பும்படியாகி விட்டது. இதைக் கண்ட நாராயணன் "என்ன மாமா இது! இப்படியும் ஒரு அசட்டுக் கும்பல் இருக்குமா? பெண்ணைக் கண்ணில் காட்டவே இல்லையே!" என்று ஆவேசம் வந்தவன்போல் படபடப்புடன் கூறினன்.

மாமாவுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.

"என்னடா இது? இத்தனை நேரம் உன்னுடன் இங்கிலீஷுாம் தமிழுமாக என்னென்னவோ பேசினளே, அவளை நீ பார்க்கவே இல்லையா? அவள்தான் ஊர்மிளா!" என்று கூறி ராவ்சாஹிபைக் கூப்பிட்டு, "ஸார், உங்கள் பெண்ணைக் கொஞ்சம் வரச் சொல்லுங்கள். பிள்ளையாண்டான் பார்க்கவே யில்லையாம். வந்து நமஸ்காரம் பண்ணச் சொல்லுங்கள்" என்றார்.

அவன் பக்கத்தில் உட்கார்ந்து சிறிதும் லஜ்ஜையின்றிப் பேசிக் கொண்டிருந்த ஊர்மிளா நமஸ்காரம் பண்ணச் சொன்னதும் லஜ்ஜையுடன் தலை குனிந்து வந்து நமஸ்காரம் செய்தாள். படித்த பெண் அல்லவா? கர்நாடக முறையில் நமஸ்காரம் செய்யச் சொன்னது அவளுக்கு லஜ்ஜையாயிருந்தது போலும்! நாராயணனுக்கும் ஊர்மிளாவுக்கும் கர்நாடக முறைப்படியே பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு விவாக சுப முகூர்த்தம் விமரிசையாக நடந்தேறியது என்று சொல்லத் தேவையில்லை.



திருடன் கன்னம் வைத்து உள்ளே போய்ப் பல பெட்டிகளையும் பீரோக்களையும் உடைத்துப் பார்க்கிறன். கடைசியில் ஏமாற்றத்துடன் வாசலில் வந்து பார்த்தால் விஷயம் புரிகிறது!

# மோகனச் சிரிப்பு

~ பாரத்வாஜன் ~

நாகமலையின் அடிவாரத்தில் பங்குனி மாதப் பௌர்ணமி. இரவு பத்து மணிக்குப் புதுமையாக அமைக்கப் பெற்ற குடிசைகளுக்கும் கூடாரங்களுக்கும் மத்தியிலுள்ள மைதானத்தில் ராணுவ உடை தரித்த வங்காள வாலிபன் காப்டன் மிஸ்ராவும், தாதி உடை தரித்த இளம் பெண் மோகனமும் சாய்வு நாற்காலிகளில் அமர்ந்து கொண்டு சம்பாஷித்துக் கொண்டிருந்தனர். ஜனசஞ்சாரமே இல்லாத அந்தக் காட்டுப் பிரதேசத்தில் சென்ற இரண்டு மூன்று மாதங்களாகத் திரள் திரளாக இந்திய மக்கள் பர்மா தேசத்திலிருந்து தாய்நாட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கென்று வழியில் சாத்தியமான வரை சாதனங்கள் நியமிக்கப்பட்டிருந்தன. ஆயினும், வெகு தூரம் நடந்து வந்த தளர்ச்சியினாலும் புருஷன், மனைவி, வீடுவாசல், முதலியவற்றைப் பறி கொடுத்ததினால் ஏற்பட்ட மனக் கிளர்ச்சியாலும் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சிகிச்சை செய்யும் பணியை இவ்விரு ஊழியர்களும் ஏற்றுக்கொண்டிருந்தனர். ஒரு நாள் அவர்கள் இரவு போஜனத்தை முடித்துக்கொண்டு, வழக்கம்போல் துயிலப் போகுமுன் சிறிது சம்பாஷணையில் ஈடுபட்டிருந்தனர்.

தாதிப் பணியில் மோகனத்தின் ஊக்கமும் தளரா சேவையும் மிஸ்ராவின் உள்ளத்தைக் கவர்ந்தது. பெயருக்குரிய அவளது வதனத்தின் வசீகரமும் அவனது மனதைக் கவர்ந்தது. அன்றைக்காவது அவளது பூர்வ சரிதையையும், குலம் கோத்திரத்தையும் விசாரித்து விடலாமா என்று நினைத்தான். ஆனால் அதற்குப் போதிய தைரியம் வரவில்லை. இன்னும் ஒரு மாதத்திற்குள் இந்திய மக்கள் அனைவரும் தாய்நாட்டிற்குத் திரும்பி விடுவார்கள். தனக்கும் வேறு இடத்திற்கு மாற்றலாகி விடும், மோகனமும் சென்னை சென்று விடுவாள். இவ்வாறு எண்ணமிட்டு, திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவன்போல், "மோகனம்! சுமார் ஒரு மாதத்திற்குள் இங்கிருந்து எனக்கு மாற்றலாகும் பொழுது பத்து நாள் லீவு எடுத்துக்கொண்டு சென்னைக்கு வந்து உனது பெற்றோர்களைக் காண வேண்டும். உனது தந்தையின் பெயரும் விலாசமும் சொல்ல மாட்டாயா?" என்று கேட்டான்.

வழக்கமாகப் பளிச்சென்று பதில் அளிக்கும் மோகனம் ஒரு கணம் மௌனம் சாதித்தாள். மறுகணம் அவள் வெகு நாளாக உள்ளடக்கிய மனத் துயரம் பீறிட்டுப் பொங்கிவர அவளது செவ்வதனத்தின்மேல் திரள் திரளாகப் பெருகி வந்த கண்ணீர்த் திவலைகளைத் துடைத்துக் கொண்டு "காப்டன் மிஸ்ரா! நீங்கள் எதற்காக என் தந்தையைக் காண விரும்புகிறீர்கள் என்பதை நான் அறியாமலில்லை. ஆனால் அது எவ்வளவு நிர்ப் பிரயோசனம் என்பது என் விருத்தாந்தத்தைக் கேட்டால் உமக்குத் தெரியவரும். நானாகவே சில நாளாகத் தெரியப்படுத்த வேண்டுமென்றிருந்தேன். இன்று கட்டாயமாகச் சொல்வதற்காயிற்று" என்று தனது கதையை ஆரம்பித்தாள்.

## 2

எனது தந்தை இராஜகோபாலய்யர் சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் புரொபஸர். அவருக்கு எனது அண்ணா டாக்டர் ஸ்ரீனிவாசனும் நானும் இருவரே குழந்தைகள். ஐந்து வருஷங்களுக்கு முன் 'இன்டர்மீடியட்' பரீக்ஷையில் முதலாவது வகுப்பில் தேறியபின் என்னுடைய விவாகம் நடந்தது. எனது கணவர் வேதம் என்பவர் பர்மாவில் 'அக்கௌண்ட்ஸ்' ஆபீஸராக வேலைபார்த்து வருகிறார். தாசில்தார் அண்ணாசாமி ஐயருக்கு அவர் ஒரே புதல்வர்.

ரசாயன சாஸ்திரத்தில் நான் காட்டிய ஊக்கத்தை முன்னிட்டு 'ஆனர்ஸ்' வகுப்பில் என்னைச் சேர்க்க வேண்டுமென்று எனது தந்தைக்கு ஒருபுறம் ஆசை. ஆனால் இவ்வளவு நல்ல வரன் தானாகவே வரும்பொழுது அதைத் தள்ளிவிடவும் தோன்றவில்லை. எனக்கு மேல் படிப்பில் அவ்வளவு ஊக்கமில்லை என்பதை என் தந்தை அறிவார். பரீக்ஷை எழுதி முடிந்ததும் நர்ஸ் பயிற்சிக் கலாசாலையில் சேர்ந்திருந்தேன். மெடிகல் காலேஜில் சேர்ந்து வாசிக்க வேண்டுமென்பது என் அண்ணாவின் கட்சி. ஆனால் அவருடைய சொந்த ஆஸ்பத்திரியில்

தாதிப்பெண்ணாகப் பணி செய்ய வேண்டுமென்று என்னுடைய ஆவல். நோயாளிகளின் சிகிச்சையில் டாக்டர்களைக் காட்டிலும் தாதிப் பெண்களுக்கே அரிய சேவை செய்வதற்கு இடமிருப்பதாக என்னுடைய தீவிர நம்பிக்கை. ஆனால் இல்லற வாழ்க்கையில் வெறுப்பு ஒன்றுமில்லை. என்னுடைய கணவரைப் பால்ய வயதில் பார்த்திருக்கிறேன். திடசாலி. நல்ல அழகு வாய்ந்தவர். 'அக்கௌண்ட்ஸ்' பரீக்ஷையில் அந்த வருஷம் அவர் முதலாவதாகத் தேறியிருந்தார். ஆதலால் எனது தந்தை விவாக விஷயத்தைப் பற்றி என்னைக் கேட்டதும் அவருடைய நோக்கத்துக்கு மாறாக நான் ஒன்றும் சொல்வதற்கில்லையென்று என்னுடைய சம்மதத்தை ஒருவாறு தெரிவித்தேன்.

அண்ணாசாமி ஐயருக்குத் தம் புதல்வனின் விருப்பத்தைக் கேட்டறிய வேண்டுமென்ற எண்ணமே தோன்றவில்லை. ஆயினும் கலியாண ஏற்பாடுகள் நடந்து வந்தன. என்னைக் கலியாணம் பண்ணிக்கொள்வதில் இஷ்டமில்லையென்று ஒருநாள் எனது கணவர்—அல்லது கணவராக வரப்போகிறவர்—ஸ்பஷ்டமாகத் தமது அன்னையிடம் தெரிவித்தார். அவர் "ஏண்டா, வேதம்! படிப்பும், அழகும், குலமும், கோத்திரமும் எல்லாம் நன்றாக வாய்த்திருக்கும்பொழுது, வேண்டாம் வேண்டாமென்று ஏன் தள்ளிக் கழிக்கிறாய்?" என்று மன்றாடினாராம். "எனக்கு ஒன்றும் தெரியாதம்மா! அவள் பள்ளிக்கூடத்தில் வேலை பார்த்து வரும் எனது நண்பன் சொல்லிக் கேட்டிருக்கிறேன். மோகனத்தைச் சுற்றிச் சதா சர்வகாலம் மாணாக்கர்கள் வட்டமிட்டுக் கொண்டிருப்பார்களாம். ஒன்றும் அறியாததுபோல் புன்முறுவலுடன் தன் வகுப்புக்குப் போய் வந்து கொண்டிருப்பாளாம். ஒன்றிரண்டு மாணாக்கர்கள் வரைமீறி ஏதாவது நடந்து கொண்டால் நறுக்காக இரண்டு வார்த்தை பேசி அவர்கள் வாயைக் கட்டி விடுவாளாம். போதாக்குறைக்குத் தாதிப் பெண்ணாக வேறு பயிற்சி பெற்று வருகிறாள். எனக்கு அத்தகைய பெண் வேண்டாம், அம்மா! கலியாணத்தை நிறுத்திவிடச் சொல்லு" என்று எனது கணவர் மீண்டும் வற்புறுத்தினார். அச்சமயம் உள்ளே வந்த அண்ணாசாமி ஐயர் "நான் பார்த்து அவனுக்கு ஒரு பெண்ணை நிச்சயம் செய்து பொழுதும் நாளும் குறித்தபின் அக் கலியாணத்திற்கு வராமல் நின்று விடுவானா, பார்க்கலாம்! நீ மேற் காரியங்களைக் கவனி" என்று மனைவியை அதட்டிவிட்டு வெளியே போய் விட்டாராம். இதெல்லாம் எனக்கு அப்பொழுது தெரியாது. பிறகு குறித்த பொழுதில் எங்கள் மணம் நிகழ்ந்தது.

## 3

அன்று மாலை எனக்குத் திடீரென்று கொடிய ஜுரம் கண்டது. வெப்பம் தாங்காது நினைவு தப்பவே, மணவீடு அல்லோலப் பட்டது. என் தமையன் என் கால்களையும் கைகளையும் குளிர்ந்த தண்ணீரால் துடைத்துப் பார்த்தார். ஜுரம் தணியவில்லை. பிறகு என் மன்னியைக் குடம் குடமாகத் தண்ணீர் கொண்டு வரச் சொல்லிப் படுக்கையின்மேல்





"சார், அதெல்லாம் நமக்கேன் வம்பு? இந்த இடத்தை நாம் கொஞ்சம் விலகித்தான் போகணும். இல்லாவிட்டால் பின்னாலே தொந்தரவு! ஒரு சமயம் உயிருக்கே ஆபத்து வந்தாலும் வரும்!"

ரப்பர் துணியைப் போட்டு என் தேக முழுவதையும் குளிப்பாட்டினார். இந்த சாகஸச் சிகிச்சையைத் தாளாது எனது அன்னையும் தந்தையும் 'ஈசன் விட்ட வழி' என்று வாசற்பக்கம் சென்று விட்டனர்.

சம்பந்திகள் ஜாகைக்குச் செய்தி எட்டிற்று. எனது மாமியார் கவலையுடன் "நல்ல தேர்ச்சி பெற்ற டாக்டரைக் கூட்டி வந்து காண்பிக்காமல் சேற்றுப் பரீக்ஷை தேறின கற்றுக் குட்டியிடம் சிகிச்சையை ஒப்புவிக்கலாமா? ஜுரத்தைக் கல்லா, கரண்டியா, தண்ணீரை விட்டுச் சூட்டை ஆற்ற?" என்று தமக்குத் தெரிந்த அநுபவத்தையும் அறிவையும் வெளியிட்டார். உடனே என் கணவர் எங்கள் வீட்டுக்கு ஓடிவந்து, முகம் சிவக்க, உதடு துடிக்க, எனது அண்ணனைப் பார்த்து, "மூன்றாம் பாடப் புத்தகத்தில் 'முட்டாள் கம்மாளன்' என்ற பாடத்தைப் படித்திருக்கிறேன். இன்றுதான் அந்த முட்டாளை நேராகப் பார்க்கிறேன்" என்று ஏளனமாக ஆரம்பித்து, "என் மனைவிக்கு என் உத்தரவில்லாமல் இம்மாதிரி சாகஸச் சிகிச்சை செய்ததற்கு உன்னைப் போலீஸார் வசம் ஒப்புவிக்கவேண்டும். பர ஸ்திரீயைத் தொட்டுப் பரிமளிப்பதற்கு உனக்கு எவ்வளவு தைரியமடா?" என்று ஓங்கின கையுடன் நெருங்கிவந்தார்.

இத்தருணத்திலும் என்னுடன் பிறந்த குறும்பும் நகைச்சுவையும் தோன்றவே, "அண்ணா! உன் 'மூட'த்தனத்தால் இழந்த நினைவைத் திரும்பப் பெற்றேன். பர ஸ்திரீ யார்? அவருக்கென்றோ என் கண் மூடியதும் அநேகர் வேறு பெண் கொடுப்பார்கள். இப் பிறப்பில் நான் போய்விட்டால் உனக்கு வேறு சகோதரி கிடைப்பது அரிதல்லவா?" என்றேன்.

உடனே என் கணவர் "இனி உன் வாழ்நாளெல்லாம் அழு. உனக்கும் எனக்கும் இனி யாதொரு சம்பந்தமு மில்லை" என்று கடிந்து மொழிந்துவிட்டுத் தமது பெற்றோர்களுடன் அன்றிரவே ஊருக்குச் சென்று விட்டார்.

## 4

இச் சம்பவம் நடந்த பிறகு தான் என்னை மணப்பதில் என் கணவருக்கு வெறுப்பு இருந்ததும், தாய் தந்தையரின் நிர்ப்பந்தத்தால் அதற்கு ஒப்புக்கொண்டதும் தெரிய வந்தது. நான் விளையாட்டுப் புத்தியால் பிதற்றின வார்த்தைகளுக்காக என்னை மன்னித்து அவருடன் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று எத்தனையோ கடிதங்கள் எழுதினேன். அவர் ஒன்றுக்கும் மசியவில்லை.

பிறகு பர்மாவுக்கு வேலை பார்க்க உத்தரவு பிறக்கவே அவர் ரங்கூனுக்குச் சென்று விட்டார். என் பயிற்சி முடிந்து எங்கள் ஆஸ்பத்திரியில் தாதி வேலை செய்து வந்தேன். மூன்று வருஷங்கள் கடந்தன. எங்கள் இருவரது பெற்றோர்களும் கலந்து யோசித்து என்னை ரங்கூனில் எனது கணவர் வீட்டுக்கு என் மாமாவுடன் அனுப்பி வைத்தனர். மாமா என்னை விட்டு விட்டு மறு கப்பலில் திரும்பிவிட்டார். வீட்டுக் காரியங்கள் முழுவதையும் நானே ஏற்றுக் கொண்டேன். முதல் தேதியன்று சம்பளம் வாங்கினதும் வீட்டுச் செலவிற்கு வேண்டிய பணத்தை என் மேஜைமேல் வைத்து விட்டு ஒரு வார்த்தையும் பேசாமல் என் கணவர் சென்று விடுவார். நாளடைவில் சுக வாழ்வு எய்திடலாம் என்ற நம்பிக்கையுடன் நான் காலம் தள்ளி வந்தேன்.

ஒரு நாள் எனது கணவர் ஆபீஸிலிருந்து திரும்பி வந்ததும், "இன்று என் மேலதிகாரி இராப் போஜனத்திற்கு வருவார். அவர் வந்திருக்கும் சமயம் நாம் நமது நிலைமையைக் காட்டிக் கொள்ளாமல் சாதாரணத் தம்பதிகள்போல நாடகம் நடத்திக் காட்ட வேண்டும்" என்று ஒரு கடித மூலம் தெரியப்படுத்தினார். அப்பொழுதும் என் தொட்டிற் பழக்கம் விட்டபாடில்லை. "நாடகத்திற்கு முன்னால்

சிறிது ஒத்திகை நடத்துவோமா?" என்று கேட்டேன். அதற்கு அவர் "இந்நாடகம் அதி சீக்கிரமாகவே முடிந்துவிடும். நான் இராணுவ அக்கௌண்ட்ஸ் வேலையை ஒப்புக் கொண்டிருக்கிறேன். நாளைக்குப் பிரயாணம். நீயும் நாளைக் கப்பலில் சென்னைக்குப் போக டிக்கெட்டு வாங்கி யிருக்கிறேன்!" என்று அளித்த பதில் என்னைத் திடுக்குறச் செய்தது.

பிறகு சென்னை போய்ச் சேர்ந்தேன். ஒரு வருஷத்திற்கு முன் பர்மா எதிரி வசமாயிற்று. அங்குள்ள இந்திய மக்களனைவரும் மிகவும் கஷ்டப்பட்டுத் தாய் நாடு திரும்பிவரும் செய்தியைப் பத்திரிகைகளில் படித்தறிந்தேன். இங்கு அவர்களுக்காக ஒரு பெரிய ஆஸ்பத்திரி நியமிப்பதாயும் அதற்கு டாக்டர்களும் நர்ஸ்களும் தேவையென்றும் தெரிந்து ஒரு வேளை மறுபடியும் அவரைச் சந்திக்க நேரலாகாதா வென்ற ஆசையுடன் இப்பணியை ஒப்புக் கொண்டேன். திரும்பி வந்த ஆபீஸர்கள் ஜாபிதாவில் என் கணவரின் பெயரைக் காணவில்லை. அவரைப் பற்றிய வேறு தகவலும் கிடைக்கவில்லை.

5

மோகனம் இவ்வாறு தன் துர்பாக்கியச் சரிதையைக் கூறி முடித்ததும் தூரத்தில் ஆகாயத்தில் விமானங்கள் பறந்து வரும் சத்தம் கேட்டது. அன்று மோகனம் பெரிய செஞ்சிலுவைக் கொடி ஒன்றைக் கம்பளத்தில் சேர்த்துத் தைத்திருந்தாள். அக்கம்பளம் மைதானத்தில் விரிக்கப்பட்டிருந்தது. செஞ்சிலுவையை ஆகாயத்திலிருந்து கண்ணுற்றால் எதிரி விமானிகள் ஆஸ்பத்திரியென்று தெரிந்துகொண்டு அந்த இடத்தைத் தாக்காமல் விட்டு விடலாமென்று மிஸ்ராவும் மோகனமும் நம்பியிருந்தனர். ஆயினும் விமானங்கள் சமீபத்தில் வரவே இருவரும் ஓடி ஒளிந்து கொண்டனர். அச்சமயம் மோட்டார் லாரியொன்று ஆஸ்பத்திரிக்குள் வந்து கொண்டிருந்தது. திடீரென்று ஆகாயத்திலிருந்து குண்டுமாரி பொழிந்தது. இரண்டு நிமிஷங்களுக்குள் எதிரி விமானங்கள் திரும்பிப் போய்விட்டன. மிஸ்ராவும் மோகனமும் வெளியில் வந்து மைதானத்தின் மத்தியில் செஞ்சிலுவை போர்த்த கம்பளம் துண்டு துண்டாக பிளக்கப்பட்டிருப்பதையும், மோட்டார் லாரி சல்லடைக்கண்போல் துளைக்கப்பட்டிருப்பதையும் அதனுள்ளிருந்த சிலர் கொல்லப்பட்டும் வேறு சிலர் படுகாயமடைந்திருப்பதையும் கண்டனர். உடனே சிப்பந்திகளை வரவழைத்து இறந்து போனவர்களை ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டுக் காயமடைந்தவர்களை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்று வேண்டிய சிகிச்சைகளைச் செய்ய ஆரம்பித்தனர்.

கடைசியாக மிஸ்ரா ஒரு நோயாளி குற்றுயிருடன் கிடக்கக் கண்டான். உடலில் காயம் ஒன்றும் தென்படவில்லை. குண்டு வீச்சினால் ஏற்பட்ட அதிர்ச்சியால் இரத்த ஓட்டம் அநேகமாக நின்று விட்டதாகத் தோன்றிற்று. பிறருடைய இரத்தத்தைப் பிரயோகித்தால் ஒரு வேளை உயிர் தப்ப வைக்கலாம் என்று மிஸ்ரா எண்ணமிட்டான். ஆனால் ஒரு சிலருடைய இரத்தத்தைத்தான் சிலருக்குப் பிரயோகிக்கலாம். இப் பிரயோகத்திற்கு முன் சில சோதனைகள் செய்ய வேண்டும். அதற்குரிய சாதனம் அங்கே கிடையாது. மிஸ்ரா என்ன செய்வதென்று தெரியாமல்



"என்ன அண்ணே! ஆச்சரியப் பட்டு நிக்கறே?"

"இல்லே! பந்தக்கால் நட்டு இருக்காங்களே, எப்படி அத்தனை உயரத்திலே போய் மாவிலை கட்டினாங்க? ரொம்பக் கஷ்டமாச் சேன்னு ஆச்சரியப்படுகிறேன்!"

தனது கவலையை மோகனத்திற்குத் தெரிவித்தான். அதற்கு அவள் "முன் ஒரு தடவை இண்டியில் என் இரத்தத்தைப் பரிசோதித்து, நான் எல்லோருக்குமே இரத்தத்தைக் கொடுக்கக் கூடிய இனத்தைச் சேர்ந்தவள் என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆதலால் தாராளமாக எனது இரத்தத்தையே பிரயோகியுங்கள்" என்றாள். இரத்தக் கொடையால் மோகனத்திற்குத் தீங்கு ஒன்றும் நேரிடாதென்று மிஸ்ரா அறிந்திருந்தும் ஒரு கணம் தயங்கினான்.

அப்பொழுது மோகனம் நோயாளியின் ஆடைகளைத் தளர்த்தி இரத்தப் பிரயோகத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யலானாள். நோயாளியின் முகத்தை உற்றுப் பார்க்கவே மோகனத்திற்குத் தன் கணவரது ஜாடை போல் தோன்றிற்று. கழுத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த ஒரு சிறிய பித்தளை அடையாளத் தகடை எடுத்ததும், 'வேதம், ராணுவ அகௌண்டன்ட்ஸ்' என்ற விலாசத்தைப் பார்த்தாள். துக்கம் நெஞ்சை அடைத்தது. எனினும் மனதைத் திடப்படுத்திக்கொண்டு "டாக்டர்! தாங்கள் தான் இன்று எனக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்தருள வேண்டும். இவர்தான் என் ஆருயிர்க் கணவர். தயவு செய்து சீக்கிரமாக வந்து உதவுங்கள்' என்று பரபரப்புடன் கூறினாள். மிஸ்ராவின் மனதில் ஒரு புரட்சி ஏற்பட்டது. "மோகனத்தின் வாழ்விற்குத் தீங்கிழைத்தவனை உயிர் தப்ப வைப்பதில் என்ன பயன்?" என்று ஒரு முறை எண்ணமிட்டான். அவ்வெண்ணத்தின் மூலகாரணம் தன் சுயநலமே என்று உடனே அவன் அறிவுக்குத் தென்பட்டது. தம் தொழில் முறையைக் கைவிட்டுப் பேதமை எண்ணங்களுக்கு இடம் கொடுத்ததற்காக வருந்தி அதி சீக்கிரமாகத் தனது வேலையில் ஈடுபட்டு மனைவியின் இரத்தத்தைப் புருஷனுக்கு ஊடுருவித்தான்.

சில நேரம் கழித்து வேதம் கண் திறந்து ஒரு புறம், மோகனமும் மறுபுறம் மிஸ்ராவும் நின்று கொண்டிருப்பதைக் கண்டான். "யாரது? மோகனமா?" என்றான் ஈனஸ்வரத்தில். மோகனம் அவன்மேல் சிரம் குனிந்து கண்ணீரைப் பெருக்கினாள்.

## 6

ஒரு வாரத்திற்குள் வேதம் பூரண சொஸ்தமடைந்தான். மிஸ்ராவுக்கும் அவனுக்கும் அதிவிரைவில் நட்பு மூண்டது. மோகனம் இல்லாத சமயம் ஒருநாள் மிஸ்ரா தான் அவளைக் காதலித்ததையும் அதன் பயனாய் வேதத்தின் உயிருக்கே ஒரு கணம் ஹானி ஏற்பட இருந்ததையும் வெளியிட்டான்.

"மிஸ்ரா! என் உயிரை மீட்டதற்கு எவ்வாறு உனக்குக் கைம்மாறு செய்வதென்று தத்தளித்துக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாக உயிர் பிழைத்தேன். மோகனத்தை மணப்பதனால் நிகழும் தீவாந்திர சிட்சையிலிருந்து உன்னைத் தப்புவித்தேனே!" என்று எதிர்பாராதபடி வேதம் பரிகசிக்கவே, "உமக்குக்கூட நகைச்சுவை ஏற்பட்டு விட்டதே?" என்று மிஸ்ரா வியந்தான்.

"இது என் பேச்சல்ல. என் நாவில் இப்பொழுது மோகனத்தின் இரத்தம் அல்லவா ஊறுகிறது!" என்றான் வேதம் சிரித்துக்கொண்டே. அதைக் கேட்டுக் கொண்டே புன்னகை பூத்த வண்ணம் உள்ளே வந்தாள் மோகனம்.



"சார்! இந்த மாதிரி கூட்டமாக நிற்கக்கூடாது. எல்லோரும் 'க்யூ' வரிசையில் நில்லுங்கள், தெரிந்ததா?"

"உம். இப்பொழுது எல்லோரும் ஏறுங்களேன்! உங்கள் அதிஷ்டம் பஸ் காலியாகவே வந்து விட்டது."

"யார் ஐயா ஏற வந்தார்கள்? எங்களை இத்தனை வழியனுப்ப அக்கறையா வந்தீராம்?"

# அவர்களுடைய தந்திரங்களை அறிந்து,

## அவர்களைத் தோற்கடியுங்கள்!




சபாஷ்! கொள்ளை லாபக்காரர்களைத் தோற்கடிக்க அதுவே வழி. உங்களை அவர்கள் ஏய்க்கும்படி விடாதீர்கள். அதிக விலை பெற அவர்கள் முயற்சித்தால், ரொக்க ரசீது கேட்டு வாங்கி அவர்களைப்பற்றி போலீசுக்குத் தெரிவியுங்கள்.

## ப்ளாக் மார்க்கெட்டுக்கு இடங் கொடாதீர்கள்

அப்போது அது ஒழிந்து விடும்

இந்திய சர்க்கார் தகவல், ஒலிபரப்பு இலாகா வெளியீடு.

# ப்ளான்டர்ஸ் நீலகிரி தேயிலை



## 2 சிக்கனமுள்ள ரகங்கள்



இன்று இந்தியா முழுவதிலும் டீ ரசிகர்கள் ப்ளான்டர்ஸ் டீயின் லோட்டஸ், சிகப்பு டைமெண்ட், ரகங்களை உபயோகிக்கின்றனர். அவைகள் உயர்ந்த டீ. விலையில் குறைவானது. அவற்றின் மணம், ருசி இவைகளை நீங்கள் விரும்புவீர்கள். அவைகள்தான் வீட்டில் தினந்தோறும் அருந்துவதற்கு உகந்த டீ என்பதை மற்றவர்களைப் போல் நீங்களும் ஒப்புக் கொள்ளுவீர்கள்

இன்றே அவைகள் உபயோகித்துப் பார்க்கத் தகுந்தவை.

PTK-13TM

**தி ப்ளான்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூடலூர், நீலகிரி, தென் இந்தியா.

# காலக்ஷேபம்

### கவனித்ததினால்தான்!

ஹோட்டல் மாடிப்படியில் ஒருவர் கால் தவறி விழுந்துவிட்டார்.

மானேஜர்:—அடடா! 'படியில் ஜாக்கிரதையாகப் பார்த்து இறங்கவும்' என்று ஒரு போர்டு கூடப் போட்டிருக்கிறேமே, கவனிக்கவில்லையா?

விழுந்தவர்:—அதைக் கவனித்துக் கொண்டே இறங்கினதில்தான் ஐயா விழுந்து விட்டேன்!

—பி. ஆர். சுப்ரமணியன்.

★

### பார்க்காத இடம்!

தகப்பனுர்:—நம்ம அம்பிப் பயல் பார்க்காத இடமாகப் பார்த்து இந்தப் போட்டோவை வைக்க வேண்டும்.

தாயார்:—அதற்கென்ன? அவனுடைய பாட புத்தகத்தில் வைத்தால் போச்சு!

—கே. அச்சுதன்.

★

### ஏழ்மை!

"ஏழ்மை" என்ற விஷயத்தைப் பற்றி உபாத்தியாயர் ஒரு வியாசம் எழுதச் சொன்னுர். ஒரு கோடீஸ்வரனின் மகனுன சீனு என்ற சிறுவன் பின்வருமாறு எழுதியிருந்தான்:

"ஓர் ஊரில் ஒரு சிறுவன் இருந்தான். அவன் மிகவும் ஏழை. அவன் தாயார் தகப்பனுர் எல்லோரும் ஏழைகள். அவன் வீட்டிலிருந்த சமையற்காரன், தோட்டக்காரன், வேலையாட்கள் யாவரும் ஏழையாயிருந்தனர். அவர்கள் வீட்டு மோட்டார் ஓட்டியும் ஏழையாயிருந்தான். அந்தச் சிறுவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த உபாத்தியாயரும், அவனைக் கவனித்துக் கொள்ள வேண்டி நியமிக்கப்பட்டிருந்த வேலைக்காரியும் ரொம்ப ஏழையே. அவனுடைய வீட்டின் மேன் மாடியிலிருந்து எங்கு பார்த்தாலும் ஏழ்மைத்தனமே தென்பட்டது."

—என்னேன்.

### குரல் கேட்குமா?

அபேட்சகர் (தேர்தல் சமயத்தில்):—என்னை மட்டும் நீங்கள் தேர்ந்தெடுத்திருக்கனுல், ஆறாயிரம் மைலுக் கப்பால் இருக்கும் பிரிட்டிஷ் மந்திரிகள் காதில் விழும்படி சிம்ம கர்ஜனை செய்வேன்.........!

கோடியில் இருந்து ஒரு குரல்:—ஐயா! கொஞ்சம் உரக்கப் பேசுங்கள். காதில் விழவில்லை.

—பி. எஸ். சந்திரசேகரன்.

★

### உஷார்!

வெளியூர் வாசி:—ஐயா! நான் இருப்பது தேனூர்; என் பெயர் சர்க்கரைச் செட்டி. இவ்வூரில் தங்க ஏதாவது வீடு கிடைக்குமா?

உள்ளூர் வாசி:—ஐயா! நீர் ஜாக்கிரதையாய் இரும். இவ் வூரில் எறும்புகள் அதிகம்!

—கே. விட்டல் ராவ்.

★

### கைப் பழக்கமோ!

நண்பர்:—ஏன் ஒரு மாதிரி கலங்கினுப் போல் இருக்கிறீர்கள்?

பத்திரிகை ஆசிரியர்:—ஒருவர் என் பேருக்கு அவர் சொத்துக்களை உயில் எழுதி வைத்து, அந்த உயிலை எனக்கு அனுப்பினுர். நான் அவசரத்தில், அதையும் ஒரு கட்டுரை என்று நினைத்து ஞாபகமறதியாக, "தாங்கள் அனுப்பிய விஷயம் திருப்திகரமாக இல்லாததால் வருத்தத்துடன் திருப்பி அனுப்புகிறேன், மன்னிக்கவும்" என்று எழுதித் திருப்பி விட்டேன்.

—டி. எம். ஜி.

★

### காரணம்

நண்பர்:—ஏன் ஸார், இன்று அசெம்பிளியில் நடந்த விவாதத்தில் சச்சரவு பலத்து விட்டதாமே, எதைப்பற்றி விவாதமோ?



மெம்பர்:—'அமைதியை நிலை நாட்டுவது எப்படி?' என்பதைப் பற்றி!

—டி. என். சுப்புலக்ஷ்மி.

# ராமுவின் சாமர்த்தியம்

ராஜி



ராமு அவன் தகப்பனாருக்கு முதல் பையன். அதனால் ராமு அவன் வீட்டில் செல்வமாகவே வளர்ந்து வந்தான். அவனுக்கு ஓர் தம்பியும் ஓர் தங்கையும் உண்டு. செல்வமாக வளர்ந்து வந்ததால் ராமு தகப்பனார் சொல்வதையும் கேளாமல் பிடிவாதம் பிடிப்பான். பிடிவாதம் பிடிப்பானே தவிர ராமு மிகவும் புத்திசாலியான பையன். அதுவுமல்லாமல் மிகவும் தெய்வ பக்தி உடையவன்.

"அப்பா, எனக்கு ஒரு புதுச் சட்டை வாங்கித் தா!" என்று தன் தகப்பனாரைக் கேட்டான் ராமு. அதற்கு அவன் தகப்பனார் "ராமு! இன்று வேண்டாம்; நாளைக்கு வாங்கித் தருகிறேன்" என்று சொன்னார். ராமு தான் பிடிவாதக்காரனாயிற்றே! அவனா விடுபவன்? "அப்பா! எனக்கு இன்று தான் புதுச்சட்டை வாங்கித் தர வேண்டும். நாளைக்கு வேண்டாம்" என்று கத்த ஆரம்பித்தான். தன்னை எளிதில் விடமாட்டான் என்று அறிந்த அவன் தகப்பனார் ராமுவை எப்படியாவது ஏமாற்ற வேண்டும் என்று ஓர் யோசனை செய்தார். உடனே ராமுவைக் கூப்பிட்டு "ராமு! சீட்டுக் குலுக்கிப் போடுவோம். ஒரு சீட்டில் 'புதுச் சட்டை நாளைக்கு வாங்கலாம்' என்று எழுதலாம். மற்றொரு சீட்டில் 'புதுச் சொக்காய் இன்றைக்குத்தான் வாங்க வேண்டும்' என்று எழுதலாம். சீட்டை மடித்துப் போட்டு, சுவாமி படத்திற்கு முன்பு வைக்கலாம். அம்பியைக் கூப்பிட்டு ஒரு சீட்டை எடுக்கச் சொல்லலாம். அம்பி எடுக்கும் சீட்டில் என்ன எழுதியிருக்கிறதோ, அப்படிச் செய்யலாம்" என்று ராமுவின் தகப்பனார் சொன்னார். அதைக் கேட்ட ராமு ஒருவாறு சமாதானமடைந்து "அப்பா! அப்படியே செய்யலாம்" என்று பதிலளித்தான்.



ராமு சுவாமி படத்தின் எதிரில் நின்று கொண்டான். சுவாமியை வேண்டிக் கொண்டே இரண்டு கைக்குள் வைத்திருந்த சீட்டுகளைக் குலுக்கினான். குலுக்கிய இரண்டு சீட்டுகளையும் கீழே போட்டான். அம்பி ஓடோடியும் வந்து ஓர் சீட்டை எடுத்தான். அச் சீட்டைப் பிரித்து ராமுவும் அவன் தகப்பனாரும் ஆவலோடு வாசித்தார்கள். அதில் "புதுச் சொக்காய் இன்றைக்குத்தான் வாங்க வேண்டும்" என்று எழுதியிருந்தது. உடனே ராமுவின் முகம் மலர்ந்தது.

ராமுவின் தகப்பனாரின் முகம் வாடிற்று. அன்றைய தினம் ராமுவுக்குப் புதுச் சொக்காய் கிடைத்தது.

அன்று முதல் ராமு எதைக் குறித்தாவது பிடிவாதம் செய்தால் ராமுவின் தகப்பனார் சீட்டுக் குலுக்கிப் போடும் முறையையேதான் கையாண்டார். ஆனால் ஒவ்வொரு முறையும் ராமுவின் பக்கமேதான் சீட்டு தீர்ப்புச் சொல்லிற்று. எப்பொழுதும் ராமுவே ஜயித்துக் கொண்டு வருவது ராமுவின் தகப்பனாருக்குச் சிறிது ஆச்சரியத்தை உண்டாக்கியது. ஒருவேளை ராமு ஜயிப்பது அவனுடைய தெய்வ பக்தியோ என்று அவருக்குத் தோன்றியது.

ஒரு நாள் ராமுவின் தகப்பனார் களைப்புடன் ஆபீஸிலிருந்து திரும்பியவுடன், "அப்பா! இப்பொழுது என்னை சினிமாவுக்கு அழைத்துப் போ" என்று கேட்டான். களைப்பு மேலிட்ட அவன் தகப்பனார் "ராமு! நாளைய தினம் அழைத்துப் போகிறேன்" என்றார். ஆனால் பிடிவாதக்கார ராமுவா விடுபவன்? "அப்பா! நான் நாளைக்கு வரவில்லை. இப்பொழுதுதான் அழைத்துப் போக வேண்டும்" என்றான். அதற்கு அவன் தகப்பனார் "இன்றைக்கு முடியவே முடியாது" என்றார். ராமு ஓவென்று அழுதுகொண்டே "சீட்டுக் குலுக்கிப் போட்டுப் பார்க்கலாம்" என்றான். அதற்கு அவன் தகப்பனார் இச்சமயமாவது ராமு தோல்வி அடையட்டும் என்று எண்ணி, அவன் சொல்லியதற்குச் 'சரி' என்று ஒப்புக் கொண்டார்.

எப்பொழுதும்போல் ராமு சுவாமி படத்தின் எதிரில் நின்றான். சுவாமியை நினைத்துக்கொண்டே சீட்டுகளைக் குலுக்கினான். சுவாமி படத்தின் எதிரில் சீட்டுகளை வைத்தான். உடனே ராமுவின் தகப்பனார், "அம்பி! இன்றைக்கு நீ சீட்டை எடுக்க வேண்டாம். பாப்பாவை எடுக்கச் சொல்" என்றார். பாப்பா ஓடோடியும் வந்தாள். கீழே இருந்த இரண்டு சீட்டுகளில் ஒரு சீட்டை எடுத்தாள். ராமுவின் தகப்பனார் இன்று ராமு ஏமாறப் போகிறான் என்று சொல்லிக் கொண்டே ஆவலுடன் சீட்டைப்



பிரித்துப் பார்த்தார். அதில் "இன்றுதான் சினிமாவுக்குப் போகவேண்டும்" என்று எழுதியிருந்தது. ராமு சந்தோஷத்தினால் கைகளைக் கொட்டிக் குதியாய்க் குதித்தான். ஒவ்வொரு முறையும் ராமுவே ஜயித்து வருகிறான் என்பதை நினைக்க ராமுவின் தகப்பனாருக்கு ஒன்றும் புரியவில்லை. அப்பொழுது அம்பி கீழே கிடந்த மற்றொரு சீட்டை எடுத்துப் பிரித்தான். "அப்பா! இதைப் பார்" என்று. ராமு அவனைத் தடுப்பதற்குள், அதை ராமுவின் தகப்பனாரிடம் கொடுத்து விட்டான் அம்பி.

அதைப் படித்தவுடன் ராமுவின் தகப்பனாருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஏன் என்றால் மற்றொரு சீட்டிலும் "இன்றுதான் சினிமாவுக்குப் போக வேண்டும்" என்று எழுதியிருந்தது. "ராமு! ஒவ்வொரு தடவையும் இரண்டு சீட்டுகளிலும் ஒரே மாதிரியாகவே எழுதி என்னை ஏமாற்றினாயா?" என்று அவன் தகப்பனார் கேட்டார். ராமு பேச முடியாமல் தலையைக் குனிந்து கொண்டே 'தன் குட்டு வெளியாகி விட்டதே' என்று 'உம்' என்று நின்று கொண்டிருந்தான்.

ஆனால் அன்று சாயந்திரம் ராமுவின் கெட்டிக்காரத்தனத்தை மெச்சி, ராமு, அம்பி, பாப்பா, எல்லோரையும் தகப்பனார் சினிமாவுக்கு அழைத்துச் சென்றார். அன்று முதல் சீட்டுக் குலுக்கிப் போடும் வழக்கம் நின்றது.

# பெல்ஜியத்திலிருந்து வைரங்கள்

இதுவரை நாங்கள் மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த பெல்ஜியத்தின் உலகப் பிரசித்தி பெற்ற தொழிற்சாலைகளில், ஆண்ட்வொர்ப் பட்டை தீட்டப் பெற்ற உயர்ந்த ரக அசல் வைரங்களை மறுபடி இறக்கு மதி செய்துள்ளோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இத்தகைய அரிய சந்தர்ப்பத்தை முதலாவதாக அளிப்பதிலிருந்து, பிரசித்தி பெற்ற வைர வியாபாரிகளாகிய எங்களது கடந்த காலத்திய அரிய சேவையின் புகழ் இன்னும் அதிகமாகிறது.

உங்களுக்குத் தேவையானவைகளை வாங்கிக் கொள்ள அனைவரையும் விஜயம்செய்யக் கேட்டுக் கொள்கிறோம். உத்தரவாதமும் அளிக்கப்படும்.

**தபால் ஆர்டர்கள் உடனுக்குடன் கவனித்து அனுப்பப்படும்**

•

# பாபாலால்

## சென்னை.



"இளஞ் சந்ததியாரில் சிறந்து விளங்குபவர்கள்"...

ஒரு ராயல் இந்தியன் ஆகாயப்படை பைலட்டினிடம் அவனுடைய இறக்கைகளுக்கும் கூடுதலாக ஏதோ ஒன்று இருக்கத்தான் செய்கிறது. இறக்கைகள் அவனுக்கு விமானமோட்டத் தெரியுமென்பதை மட்டுமே நிரூபிக்கிறது.

எல்லாக் குணங்களிலும் வைத்து அனைவரும் மிகுந்த ஆவலுடன் விரும்பும் திறம்—அல்லது பலபொழுதும் அழுத்தமாகக் கூறப்படும் நெஞ்சுத் துணிவு அவனிடம் பொருந்தியமைந்துள்ளது.

அத்துடன், சொந்தச் செயல்களே விளக்கிக் கூறும் அவனுடைய புத்திக் கூர்மை, தற்பொழுது அவன் செய்யும் ஊழியத்தின் அருமை, தன்னுடையவும் இந்தியாவினுடையவும் வருங்கால நன்மைக்காக அவன் இன்று இட்டுவரும் அஸ்திவாரங்கள்—இவைகளையும் கூட்டிப் பார்ப்பீர்களானால், இந்தியாவின் இளஞ் சந்ததியாரில் சிறந்து விளங்குபவர்களை அவன் குறிப்பதன் காரணம் உங்களுக்கு உள்ளங்கை நெல்லிக் கனிபோல் தெளிவாக விளங்கலாகும்.

எப்படி மனுப் போடுவதென்பதை எந்த ரிக்ரூடிங் ஆபீசரிடமிருந்தும் தெரிந்துக் கொள்ளலாம்.

AAA 82




# கம்பர் தரும் காட்சி



★

## 108. இவர்களெங்கே? மன்மதனெங்கே?

அயலாரைப் பார்த்ததும் யாருக்கும் சந்தேகம் உண்டாவது இயல்பு. விரோத பாவமும் உண்டாய்விடும் என்று சொன்னால் குற்றமில்லை.

குன்றுகள் அடர்ந்த வனாந்தரமான இடத்தில் அசாதாரணமான ஜடாயுவைப் பார்த்த மாத்திரத்தில் ராம லக்ஷ்மணருக்கு முதலில் சந்தேகம் உதித்தது. அடுத்தாற் போலப் பகைவன் என்றே எண்ணத் தோன்றுகிறது.

சரி, சரி. தன் முடிவைத் தேடுவதற்காகவே இவன் இங்கே வந்திருக்கிறான். அறிவில்லாத அரக்கன்தான் என்று அம்பைப் பிரயோகிக்கவே பார்க்கிறார்கள். பிறகு ஒரு யோசனை; அரக்கன் இல்லையென்றால்!

இறுதியைத் தன்வயின்
இயற்ற எய்தினன்
அறிவிலி அரக்கனும்;
அல்லனாம் எனின்,
எறுழ்வலிக் கலுழனே
என்ன உன்னிஅச்
செறிகழல் வீரரும்
செயிர்த்து நோக்கினர்.

[இறுதியைத் தன்வயின் இயற்ற எய்தினன்: தம்முடைய கையால் இறக்க வேண்டும் என்பது அவனுடைய எண்ணம் போலிருக்கிறது. தன் முடிவைத் தேடியே வந்திருக்கிறான்; அறிவிலி அரக்கனும்: இந்த அறிவில்லாத அரக்கன்; அல்லனும் எனில் எறுழ்வலிக் கலுழனே: அரக்கன் அல்லன் என்றால் மிகுந்த பலமுள்ள கருட பகவான் தான் என்று சொல்ல வேண்டும்; என்ன உன்னி: என்று நினைத்த வண்ணமாய்; அச் செறிகழல் வீரரும்: இறுகக் கழலணிந்த ராம லக்ஷ்மணரும்; செயிர்த்து நோக்கினர்: அதிசயித்துப் பார்க்கிறார்கள்—முதலில் உண்டான சந்தேகம், பயம் எல்லாவற்றையும் அதிசயம் வந்து அழுத்தி விட்டது.]

ராம லக்ஷ்மணர்கள் ஜடாயுவை அதிசயத்தோடு பார்த்த வண்ணமாய் நிற்கிறார்கள். அப்படி நிற்கிறவர்களைப் பார்த்துவிடுகிறான் ஜடாயு. அவனுக்கும் சந்தேகங்கள் உதிக்கின்றன.

வனைகழல் வரிசிலை
மதுகை மைந்தரை
அனையவன் தானும்கண்(டு)
அயிர்த்து நோக்கினன்—
'வினையறு நோன்பினர்
அல்லர், வில்லினர்
புனைசடை முடியினர்
புலவ ரோ' என

[வனைகழல் வரி சிலை மதுகை மைந்தரை: வீரக்கழல் அணிந்தவர்களாய் வில்லை ஏந்தியவர்களாய் மிக்க பலத்தோடு (மதுகை) கூடியவர்களாய் நின்ற ராம லக்ஷ்மணர்களை; அனையவன் தானும் கண்டு: அந்த ஜடாயுவும் கண்டு; அயிர்த்து நோக்கினன்: சந்தேகங்களோடு கூர்ந்து பார்க்கிறான்; வினை அறு நோன்பினர் அல்லர்: செயலொழிந்த தவத்தில் நிற்பவர்களாய்த் தோன்றவில்லை; வில்லினர்: வீரச்செயல் செய்வதற்காகவே வில் ஏந்தினவர்களாய்; புலவரோ என: தேவர்கள் தானோ இவர்கள் என்று—அயிர்த்து நோக்கினன்.]

ஜடாயு தன் இறக்கைகளின் பலத்தினால், இந்த உலகம் மாத்திரம் அல்ல, தேவர்கள் இருக்கிற வானுலகத்தையுமே நாள்தோறும் சுற்றி வருகிறவன். ஏன், வைகுண்ட லோகம், பிரும்ம லோகம் கைலாசம் எல்லாம் அவனது சஞ்சாரத்துக்கு உட்பட்டவைகள்; தேவேந்திரன் முதலிய தேவர்களையெல்லாம் தினசரி

காண்கிறவன் அவன். அப்பேர்ப்பட்டவனுக்கு ஏற்படுகிறதாம் சந்தேகம்.

'புரந்தரன் முதலிய
புலவர் யாரையும்
நிரந்தரம் நோக்குவேன் :
நேமி யானும் அவ்
வரந்தரும் இறைவனும்,
மழுவ லாளனும்
கரந்திலர் என்னை : யான்
என்றும் காண்பெறுனல்.'

[புரந்தரன் முதலிய புலவர் யாரையும்: தேவேந்திரன் முதலிய தேவர்கள் எல்லாரையும்: நிரந்தரம் நோக்குவேன்: தினந்தோறும் பார்த்து வருதலானே செய்கிறேன்; நேமியானும்: திருமாலும்; அவ் வரம் தரும் இறைவனும்: பிரும்மாவும்; மழுவலாளனும்: மழுவேந்திய சிவபெருமானும்: கரந்திலர் என்னை: எனக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருப்பவர்கள் அல்லவே.

குறிப்பு:—தேவேந்திரனையும் மற்றும் மும்மூர்த்திகளையுமே ஒத்திருக்கிறார்கள் இந்த வீரர்கள்; ஆனால் அவர்களோ என்று நான் மயங்க வேண்டியதில்லை; அவர்களோடு எனக்குத்தான் பரிச்சயம் உண்டே, என்பது பாவம்.]

தன்னுடைய அனுபவம் மிக நீண்டது என்பதைக் குறிப்பதற்காக மிகப் பூர்வமான காலத்தை எடுத்துப் பேசுகிறான்—புராண இதிகாச முறையில்த்தான்.

சிவபெருமானால் எரிக்கப் படுவதற்கு முன் மன்மதனுக்கு உருவமிருந்தது. அப்படி உருவத்துடனேயே இருந்த மன்மதனைக் கண்ணால் கண்டிருக்கிறேன் நான், என்கிறான் ஜடாயு.

'காமன்என் பவனையும்
கண்ணின் நோக்கினேன்
தாமரைச் செங்கண் இத்
தடக்கை வீரர்கள்
பூமரு பொலன்கழல்
பொடியி னேடும்ஒப்
பாம்என வருகிலன் ;
ஆர்கொலாம் இவர்?'

[தாமரைச் செங்கண் இத்தடக்கை வீரர்கள்: இதோ நிற்கிற வீரர்களது; பூமரு பொலன் கழல் பொடியினோடும்: பூவேலை செய்த அழகிய வீரக் கழல்களில் ஒட்டியிருக்கிற தூசியோடும்: அதாவது, இவர்களது கால் தூசிக்குக்கூட: ஒப்பாம் என வருகிலன்: சமானம் என்று சொல்லும்படி இவர்கள் கிட்ட வரமாட்டான் அந்தக் காமன்.

குறிப்பு:—தேவர்களை முந்திய பாட்டில் ஒதுக்கி விட்டு மன்மதனை இந்தப் பாட்டில் தனியாய் வைப்பதில் ஒரு நாகரிகமும் வேகமும் இருக்கின்றன. ராம லக்ஷ்மணர்களுடைய அழகை அவ்வளவு அழுத்திச் சொல்ல வேண்டுமாம்.]

ராம லக்ஷ்மணர்களைப் புதிதாகப் பார்த்தவுடன் தேவர்கள்தான் ஞாபகத்துக்கு வருகிறார்களாம். அனுபவத்திற் பழுத்த ஜடாயுவுக்கு அப்படி ஞாபகம் வருவது இயல்புதானே!

---

# இது என்ன வார்த்தை?

உறவினர்களின் பெயரைக் கொண்டு மக்களின் விவாக வழக்கங்களையும் தினசரி வாழ்க்கையையும் பற்றி அறியலாம். 'மாமன்' என்ற ஒரு வார்த்தையால் தாயின் சகோதரன், மனைவியின் தகப்பன், அத்தையின் கணவன் முதலியவர்களைக் குறிப்பிடுகிறோம். இவர்களின் மனைவிமார்களுக்கும் 'மாமி' என்ற ஒரே பதம்தான். இதிலிருந்து, தமிழர்கள் தொன்று தொட்டு மாமன் மகளையும், அத்தையின் மகளையும் விவாகம் செய்து வருகிறார்கள் என்று தெரிகிறது.

தவிர, 'மச்சான்' என்றால் மனைவியின் சகோதரன், மாமன் மகன், அத்தையின் மகன், கணவன் என்ற பல அர்த்தங்கள். ஒரு பெண் தன் மாமன் (அல்லது அத்தை) மகனையே கல்யாணம் செய்து கொள்ளுவதால்தான் கணவனையும் 'மச்சான்' என அழைக்கிறாள். அதாவது மச்சான் கணவனாகிறான்.

சமூக ஆராய்ச்சியாளர்கள் இத்தகைய வழக்கம் தமிழரிடையே வெகு நாட்களாக வழங்கி வருவதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதற்கு 'மேனரிக்கம்' என்று பெயர்.

குறிப்பு:—'அத்தான்', 'அம்மாஞ்சி', 'மாமனார்', 'அத்திம்பேர்' முதலிய பதங்கள் பிராமணரிடையே மட்டும் வழங்கப்படுகின்றன. இவை சமீப காலத்தில் பழக்கத்துக்குக் கொண்டு வரப்பட்ட பதங்கள்.

—கே. எஸ். எஸ்.

# அடுத்த வீட்டு அம்மாள்



நாடோடி



அடுத்த வீட்டு லக்ஷ்மிக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது என்று தெரிந்ததும், நான் அடியற்ற தென்னை மரம்போல் கீழே விழுந்தேன். ['அடியற்ற பனை மரம்போல்' என்பதுதான் வழக்கு என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் என்ன பண்ணுவது? நான் அடியற்ற தென்னை மரம் கீழே விழுவதைத்தான் பார்த்திருக்கிறேனே யொழிய, அடியற்ற பனை மரம் விழுந்ததைப் பார்த்ததில்லை.] கீழே விழுந்ததோடு இல்லை, "ஐயோ! லக்ஷ்மி! உன் பிரிவை நான் எப்படிச் சகிப்பேன்! நீ போய் விட்டால் என் வாழ்வே நிர்மூலமாகி விடுமே?" என்று கதறவும் செய்தேன்.

லக்ஷ்மியைப் "பார்ப்பதற்காக" யாராவது வந்து விட்டுப் போகும் போதெல்லாம் அவர்கள் மீது எனக்கு ஆத்திரம், ஆத்திரமாக வரும். "ஐயோ! இந்தத் தடியன்கள் லக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு போய் விடுவார்கள் போலிருக்கிறதே. பிறகு என் கதி என்ன!" என்று ஏங்குவேன்.

சென்ற நான்கு வருஷங்களாகத் தினம் ராத்திரி, "என்ன, உங்களைத்தானே!" என்று அபாய எச்சரிக்கை செய்துகொண்டு, அடுத்த வீட்டு அம்மாள் தன் புருஷனை அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரை அணுகும் போதெல்லாம் நான் குடு குடு என்று ஓடிப்போய்க் கூடத்தில் மாட்டப்பட்டிருக்கும் எங்கள் வீட்டுக் கடியாரத்தின் முள்ளைச் சரியாகப் பத்து மணியில் திருப்பி வைப்பேன். சொல்லி வைத்தாற்போல் தினம் 'டாண்' என்று இரவு பத்து மணிக்கு அடுத்த வீட்டு அம்மாள் தன் பெண் லக்ஷ்மியின் கல்யாண விஷயத்தைப் பற்றித் தன் புருஷனைக் கண்டிப்பது என்று வைத்திருந்தாள்.

நான் என் கடியாரத்தைச் சரி பார்த்துக் கொள்வதற்கு உதவியாய் இருந்த இந்தக் கல்யாணப் பேச்சு இனிமேல் நின்றுவிடுமே என்பதற்காகத்தான், நான் லக்ஷ்மிக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகி விட்டதைப் பற்றிக் கவலைப்பட்டேன். வேறு ஒன்றும் இல்லை.

அது என்னமோ தெரியவில்லை, பெண்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கும் விஷயத்தில், தகப்பனாருக்கு இல்லாத அக்கறை தங்களுக்கு இருப்பதுபோல் எல்லாத் தாய்மார்களும் காண்பித்துக் கொள்கிறார்கள். கல்யாணத்துக்கு நிற்கும் பெண்கள் உள்ள எந்த வீட்டுக்குத்தான் போங்கள், சமயம் நேர்ந்த போதெல்லாம் அந்த வீட்டுத் தாயார் அந்த வீட்டுத் தகப்பனாரைப் பார்த்து, "என்ன! உங்களைத் தானே! இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணுவது!" என்று கடிந்து கொள்வதைக் கவனிக்கலாம்.

ஆனால் பாவம், தகப்பனார்கள் என்ன செய்வார்கள்! காரியாலய வேலையைக் கவனிப்பார்களா, அல்லது மாப்பிள்ளை வேட்டையில் இறங்குவார்களா? இல்லை, அப்படித்தான் காரியாலயங்களில் காஷுவல் லீவ், மெடிகல் லீவ் என்று என்னென்னமோ லீவ் கொடுக்கிறார்களே, அதேமாதிரி கல்யாணத்துக்கு நிற்கும் பெண்களை வைத்துக் கொண்டு தவிக்கும் தகப்பனார்களுக்கு 'மாப்பிள்ளை வேட்டை லீவ்' என்று ஒன்று கொடுக்கிறார்களா?

சுயராஜ்யம் வந்ததும் இத்தகைய லீவ் ஒன்று கிடைக்க வேண்டுமென்பதற்காகப் பெண்ணைப் பெற்ற பெற்றோர்கள் எல்லாம் (நான் உள்பட. ஏனெனில் இன்னும் பதினேழு வருஷங்கள் போனால் என் பெண் அனு கல்யாணத்தைப் பற்றி நான் யோசனை பண்ணவேண்டும் அல்லவா?) கிளர்ச்சி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன்.

அடுத்த வீட்டு அம்மாளும் சென்ற நான்கு வருஷங்களாகத் தன் புருஷனை அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரை அப்படித்தான் கடிந்துகொண்டாள். ஆனால் பாவம், அடுத்த வீட்டு அண்ணாசாமி ஐயர் என்ன பண்ணுவார்? கள்ள மார்க்கெட்டில் சாமான்களின் விலை உயர்ந்திருப்பதுபோல், மாப்பிள்ளைகளின் விலையும் உயர்ந்து விட்டதாலும், கள்ள மார்க்கெட்டில் சாமான்கள்

கிடைக்கும் வருவில் மாப்பிள்ளைகள் கிடைக்கிறார்களா, என்ன?

அதோடு எத்தகைய கணவன் தனக்குக் கிடைக்கவேண்டும் என்பதைப் பற்றி, லக்ஷ்மி தனக்குள் ஒருவித முடிவுக்கு வந்திருந்தாள்.

இந்த முடிவை அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரும் ஒப்புக்கொண்டிருந்தார். அதாவது பையன் பார்ப்பதற்குக் கண்ணுக்கு லட்சணமாக இருக்க வேண்டும். குறைந்த பட்சம் பி. ஏ. யாவது பாஸ் பண்ணியிருக்க வேண்டும். இருநூறு ரூபாயாவது சம்பாதித்துக் கொண்டிருக்க வேண்டும்.

லக்ஷ்மியின் குணத்துக்கும், அழகுக்கும், படிப்புக்கும், புத்திசாலித்தனத்துக்கும் அவள் எதிர்பார்த்தது அதிகம் என்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஆனால் அத்தகைய புருஷன் லக்ஷ்மிக்குக் கிடைக்கவில்லை.

இத்தகைய யோக்யாதாம்சங்கள் உள்ள எத்தனையோ பையன்கள் லக்ஷ்மியைப் பார்ப்பதற்கு வந்தார்கள். ஆனால் வந்து என்ன பிரயோசனம்? அவர்கள் லக்ஷ்மி எப்படி இருக்கிறாள் என்றோ, என்ன படித்திருக்கிறாள் என்றோ, அல்லது அவள் புத்திசாலிதானா என்றோ கவனித்தால் தானே! அவர்கள் குறியாக இருந்தது எல்லாம் மாமனாருக்கு என்ன சம்பளம், அவருடைய மாப்பிள்ளை என்று சொல்லிக் கொண்டால் அந்தஸ்தா யிருக்குமா, மாமனாரிடமிருந்து நிறைய வரும்படி கிடைக்குமா, வரதக்ஷிணை கிடைக்குமா என்றுதான். ஆனால் அவர்களைக் குற்றம் சொல்லியும் பிரயோசனம் இல்லை.

“எனக்கு வரதக்ஷிணையில் துளிக்கூட ஆசையில்லை ஸார்! ஆனால் எங்க அம்மா வாங்கித்தான் ஆகவேண்டும் என்கிறாள். எங்க அப்பா வாங்கித்தான் ஆகவேண்டும் என்கிறார்” என்று மாதுர் வாக்கிய பரிபாலனமும், பிதுர் வாக்கிய பரிபாலனமும் செய்வதற்காக வரதக்ஷிணை வாங்கும் எத்தனை பேரை நாம் பார்த்திருக்கிறோம்?

ஆக, முதல் வருஷம் கல்யாணம் ஒன்றும் நிச்சயமாகாமற் போகவே அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரின் பாடு திண்டாட்டமாகி விட்டது. “என்ன? உங்களைத் தானே! இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணுவது?” என்று தினம் ராத்திரி பத்து மணிக்கு அடுத்த வீட்டு அம்மாள் குடைய ஆரம்பித்து விட்டாள்.

தன்னால்தானே அப்பா இப்படி அவதிப் படுகிறார் என்று, லக்ஷ்மி தன் கோரிக்கைகளைத் தளர்த்திக் கொண்டு, ஒரு படி கீழே இறங்கி வந்தாள். சம்பளம் என்ன வாங்கிக் கொண்டிருந்தாலும் பரவாயில்லை, தனக்கு வரப்போகும் கணவன் பி. ஏ. யாவது பாஸ் பண்ணியிருக்கட்டும் என்று சொன்னாள்.

அப்படியே பி. ஏ. பாஸ் பண்ணி விட்டு, முப்பது ரூபாய் குமாஸ்தா வேலையிலும், நாற்பது ரூபாய் குமாஸ்தா வேலையிலும் திருப்திப் பட்டுக் கொண்டிருந்த எத்தனையோ பட்டதாரிகள் வந்து பார்த்தார்கள். ஆனால் அவர்களுக்கு அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர் வாங்கும் சம்பளம் திருப்திகரமாக இல்லாமற் போகவே பெண் வேண்டாம் என்று போய் விட்டார்கள்.

ஆனால் அடுத்த வீட்டு அம்மாளின் ரோதனை மாத்திரம் நிற்கவில்லை. “என்ன, இப்படியே பேசாமல் இருந்தால் என்ன பண்ணுகிறது!” என்று புருஷனைப் பிடுங்கித் தின்று கொண்டேயிருந்தாள். அப்பா படும் அவதியைப் பொறுக்காமல் லக்ஷ்மி தன் கோரிக்கைகளை இன்னும் ஒரு படி தளர்த்திக் கொண்டாள். “நான் பாஸ் பண்ணியிருக்கும் இன்டர் அவர் பாஸ் பண்ணியிருந்தாலும் போதும் அப்பா!” என்றாள்.

இதே மாதிரி இன்டர் மாத்திரம் பாஸ் பண்ணிவிட்டு வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருந்த எத்தனையோ யுவர்கள் லக்ஷ்மியை வந்து பார்த்து விட்டுப் போனார்கள். ஆனால் அவர்களும் லக்ஷ்மியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள இசையவில்லை. அடுத்த வீட்டு அண்ணாசாமி ஐயர் குடியிருந்த வீடு அவருக்குச் சொந்தம்தானா என்று அவர்கள் விசாரித்தார்கள். “இல்லை, வாடகை வீடுதான்” என்று அவர் உண்மையைச் சொல்லவே பெண் வேண்டாம் என்று போய்விட்டார்கள்.

ஆனால் அடுத்தவீட்டு அம்மாளா விடுபவள்? தன் புருஷனை மேலும், மேலும் சொக்கு கொள்ள ஆரம்பித்தாள். ஒவ்வொரு சமயம் லக்ஷ்மியையும் சபிக்க ஆரம்பித்தாள். “ஒவ்வொரு வீட்டில் உன் வயதொத்த பெண்கள் இரண்டு குழந்தைக்கும், மூன்று குழந்தைக்கும் தாயாராக இருக்க நீ இன்னும் கல்யாணம் ஆகாமல் பனைமரம் போல் நிற்கிறாயே!” என்று பெண்ணை இடித்தாள், பின்னினாள், சில சமயம் அடிக்கவும் செய்தாள்.

தாயாரின் தொணதொணப்பு பொறுக்காமல் இந்த வருஷம் லக்ஷ்மி, தாயார்

பார்த்துச் சொல்லும் யாரையும் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயாராக இருந்தாள். அவன் படித்தவனாய் இருந்தாலும் சரி, படிக்காதவனாய் இருந்தாலும் சரி, கறுப்பாய் இருந்தாலும் சரி, சிவப்பாய் இருந்தாலும் சரி, சம்பாத்தியம் உள்ளவனாய் இருந்தாலும் சரி, சம்பாத்தியம் இல்லாதவனாக இருந்தாலும் சரி, யாரையும் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயாராக இருந்தாள். அப்படியே யாரோ ஒரு உதவாக்கரைப் பையனை அடுத்த வீட்டு அம்மாள் தேர்ந்தெடுத்தாள். லக்ஷ்மி அவனையே கல்யாணம் பண்ணிக் கொள்ள இசைந்து விட்டாள்.

தன் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயம் ஆகிவிட்டதைப் பற்றி இப்பொழுது அடுத்த வீட்டு அம்மாள் அடித்துக் கொள்ளும் பெருமை கொஞ்சம் நஞ்சமல்ல. "என்னுடானே பார்த்துப் பொறுக்காவிட்டால் நம்ப லக்ஷ்மிக்கு எங்கே கல்யாணம் நிச்சயம் ஆகியிருக்கப்போகிறது" என்று அடுத்த வீட்டு அம்மாள் பெருமை அடித்துக் கொள்கிறாள்.

நம் நாட்டில் ஒவ்வொரு வீட்டிலும் அடுத்த வீட்டு அம்மாளைப் போல் ஒரு அம்மாள் புருஷனைக் கடிந்து கொண்டிருக்கையில், நம் நாட்டுப் பெண்கள் யாருக்கு வாழ்க்கைப் பட்டாலும், அவனுடன் மன மொத்து, "கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்" என்று வாழ்வதில் என்ன ஆச்சரியம்! அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரவேண்டியதுதானே?

# வட்டமேஜை

திருவத்திபுரம்

ஐயா,

தாங்கள் ஜூலை 15, 1945 'கல்கி' இதழில் காலக்ஷேபத் துணுக்குகளில் "சரியான பதில்" என்ற தலைப்பில் கோமுட்டிச் செட்டியார்கள் அல்லாத மற்ற இனத்தவர்கள் ரூ. 0—8—0 வும் ரூ. 1—0—0 ம் நிதிக்கு உதவிய போது கோமுட்டிச் செட்டியார்கள் 0—0—3 போட்டதாக ஒருவர் எழுதியிருக்கிறார்.

அத்துணுக்கிலிருந்து விளங்குவது என்னவென்றால் கோமுட்டிச் செட்டியார்கள் தர்ம நிதிகளுக்கு உதவுவதில்லை என்றும் மற்றவர்கள் தாராள தர்மகர்த்தாக்களென்றும் அர்த்தமாகிறது. ஆனால் அதை எழுதியவர் உண்மையைத் தெரிந்து கொள்ளட்டும்.

தமிழ் நாட்டிலே முக்கிய ஸ்தலங்களாகிய திருப்பதி, திருத்தணி, திருவண்ணாமலை, காஞ்சீபுரம், ஸ்ரீபெரும்புதூர், திருவள்ளூர், சிதம்பரம், கும்பகோணம், ராமேஸ்வரம் முதலிய இடங்களில் பெரிய பெரிய தர்ம சத்திரங்களும், விசேஷ காலங்களில் சந்தர்ப்பணங்களும் அச்சந்தர்ப்பணைகளுக்கு வேண்டிய நிதிகளும் இருப்பதும் நடந்து வருவதும் கோமுட்டிச் செட்டியார்களுடையது தான் என்பதை அவர் அறியட்டும். இன்னும் தமிழ் நாட்டின் கண்மணியாகிய சென்னையில் பல லக்ஷக்கணக்கான நிதியில் S. K. P. D. Charities (ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி தேவஸ்தானம் பண்டுகளில்) சந்தர்ப்பணைகளுக்காகவும், கல்விக்காகவும் உபயோகப்பட்டுக் கொண்டிருப்பது கோமுட்டிச் செட்டியார்களுடைய நிதியும் தர்மமும் தான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகிறது. கொத்தவால் மார்க்கெட் பூராவும் சாயப் மார்க்கெட்டின் பல கட்டிடங்களும் அவர்களைச் சேர்ந்தது தான். இவைகளைவிடப் பெரிய நிதிகளும் தர்மங்களும் மற்ற இனத்தார்கள் ஏற்படுத்தியிருக்கிறார்களா? அப்படி ஏற்படுத்தி இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட இனத்தவரைப் பத்திரிகைகளில் ஒருவிதமாகக் கேவலப்படுத்துவது ஜாதி வித்தியாசங்களை ஒழித்து ஒற்றுமைப்பட்டுச் சுதந்திரம் பெறுவதற்கு வழியாகுமா என்று கேட்கிறேன்.

—பி. நரசிம்மலு

[மேற்படி கடிதத்தைப் படித்ததும் "எல்லாம் நன்மைக்கே" என்ற முதுமொழியில் எனக்கிருந்த நம்பிக்கை அதிகமாயிற்று. பிரஸ்தாப விகடத் துணுக்கு வெளியானதின் காரணமாகக் கோமுட்டிச் செட்டியார்களின் பிரபல தர்மங்களை நாம் தெரிந்து கொள்ள முடிந்ததல்லவா?

இந்த மாதிரி விகடத் துணுக்குகளில் யாரையும், எந்த இனத்தையும் இழிவு செய்யும் நோக்கம் சிறிதும் இல்லையென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஐரோப்பாவில் 'ஸ்காட்'கள் ரொம்பச் சிக்கன முள்ளவர்கள் என்று ஒரு சம்பிரதாயம்; அதை ஆதாரமாகக் கொண்டு பல விகடத் துணுக்குகள். அதுபோல் இந்நாட்டிலும் பிராமணர்கள் பயந்தவர்கள், வைஷ்ணவர்கள் புரளி செய்கிறவர்கள், முதலியார்கள் ஜம்பக்காரர்கள், செட்டியார்கள் கருமிகள், தட்டார்கள் மோசக்காரர்கள் என்பது போன்ற சம்பிரதாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இந்தச் சம்பிரதாயங்கள் சில சமயம் விகடங்களில் கையாளப்படுகின்றன. இவற்றுக்கும் தற்காலச் சமூக நிலைமைக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. —ஆசிரியர்.]

# ஈறுகளில் ரத்தம் கசியக் கூடாது

—முன் ஜாக்கிரதையாக இருங்கள்!

உடனே கவனிக்க வேண்டும் — ரத்தம் கசியும் ஈறுகள் பல் சொத்தைக்கு ஆரம்பம். கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் ஈறு வியாதிகளையும் பயோரியா ஜிஞ்ஜிவிடிஸ் முதலிய பல் வியாதிகளையும் தடுத்து கட்டுப் படுத்துகிறது. இவ் வியாதிகள் பற்களை நாசமாக்குவதுடன் அவைகளை நிறுத்தாவிடில் தேக ஆரோக்யத்தையே பாழாக்கும். அதில் உள்ள ஸோடியம் ரெஸினோலியேட் ஈறு உபாதைகளுக்கு பல் வைத்தியர்களின் சிகிச்சை. பற்களையும் ஈறுகளையும் ஆரோக்யமாக வைத்திருக்க கிப்ஸ் "எஸ். ஆர்." வழக்கமாக உபயோகியுங்கள்.

**Gibbs**

**"S.R." TOOTHPASTE**



GSR. 19-33 TM

D. & W. GIBBS LTD., LONDON, ENGLAND

# தி யுனைடெட் இந்தியா லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

## மதராஸ்

—:000:—

### 1944ம் டிஸம்பர்மீ 31உ முடிய வரவு செலவு கணக்குகளை அறிவிக்கும் விவரங்கள்

| | | |
|---|---|---|
| க்ளெயிம்களும் சரண்டர்களுக்கு கொடுபட்டவைகளும் | ரூ. | 14,42,435 |
| நிர்வாக செலவுகள் ... | ,, | 19,70,214 |
| தேய்மானமும் ரிஸர்வ் நிதிக்கு ஒதுக்கப்பட்டதும் | ,, | 3,47,216 |
| ஆயுள் அஷ்யூரன்ஸ் நிதி வருஷக் கடைசியில் | ,, | 2,10,00,515 |
| | ரூ. | 2,47,60,380 |

| | | |
|---|---|---|
| வருஷ ஆரம்பத்தில் ஆயுள் அஷ்யூரன்ஸ் நிதிகள் ... | ரூ. | 1,85,53,132 |
| மறுபடி சேர்த்துக்கொள்ள வேண்டிய அஷ்யூரன்ஸ்கள் நீங்கலாக பிரீமிய வரவு | ,, | 51,42,610 |
| வருமான வரி நீங்கலாக வட்டி, டிவிடெண்டு முதலியவை வரவு | ,, | 7,93,587 |
| இதர வரவுகள் ... | ,, | 2,71,051 |
| | ரூ. | 2,47,60,380 |

### ஆஸ்தியும், புதிய வியாபாரமும்

| | | |
|---|---|---|
| அடமானத்தின்பேரில் கடன்கள் | ரூ. | 11,96,680 |
| கம்பெனி பாலிஸிகளின்பேரில் கடன்கள் | ,, | 23,00,216 |
| கவர்ன்மெண்ட் மற்றும் அங்கீகரிக்கப்பட்ட செக்யூரிடிகளிலும் முதலீடுகள் | ,, | 1,23,34,798 |
| நியமன டிபாஸிட்டுகளும் இதர செக்யூரிடிகளும் ... | ,, | 21,68,534 |
| ஸ்தாவர ஆஸ்திகளின்பேரில் முதலீடுகள் | ,, | 28,51,977 |
| ரொக்கம் ... | ,, | 11,83,983 |
| இதர ஆஸ்திகள் ... | ,, | 11,87,964 |
| | ரூ. | 2,32,24,152 |

**1944-ம் வருஷத்தில் புதிய வியாபாரங்கள் 3 கோடியே 40 லக்ஷ ரூபாய்களுக்கு மேல் ஆகின்றன. தற்போது அமுலிலிருந்து வரும் வியாபாரம் — சுமார் 11 கோடிகள்**

தென்னிந்தியாவில் கிளைகள்:

பெங்களூர், பெல்லாரி, கள்ளிக்கோட்டை, காகிநாடா, கோயம்புத்தூர், மதுரை, தஞ்சாவூர், திருவனந்தபுரம், வேலூர்.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.